சோதிசாத்திரம்.

THE

# ORIENTAL ASTRONOMER:

BEING A

COMPLETE SYSTEM

OF

# HINDU ASTRONOMY,

ACCOMPANIED WITH A TRANSLATION AND NUMEROUS EXPLANATORY NOTES.

WITH AN APPENDIX.

JAFFNA:

AMERICAN MISSION PRESS:

1848.

# ADVERTISEMENT.

The preparation of this work, with the Translation and Notes, has been in hand for several years. Other and imperative engagements, daily recurring in the care and instruction of the Seminary, have left only occasional hours which could be devoted to this work. The whole has been recently revised, and carried through the press, in the midst of many urgent engagements, and under the pressure, often, of severe bodily infirmaties. This statement is made as an apology for any errors which may have escaped observation, and for any apparent want of symmetry in the Volume. The more important errors, it is believed, are noticed in the *Corrigenda* at the end of the Volume.

These circumstances also account, in part, for the long time the work has been in the press. It seems in place further to remark, that only a *part* of what was originally intended, and to which allusion is made in the Introduction, has been inserted in the Appendix.

*Batticotta Seminary,* }
*November*, 1848. } H. R. HOISINGTON.

# INTRODUCTION.—பதிகம்.

The following work has been prepared with special reference to the course of instruction in the Batticotta Seminary. As all the classes in this Institution are instructed in the English Language and European Science, this branch might be pursued in English. There are, however, important reasons, why our educated assistants, who are called to act chiefly through their own mother tongue, and among such a people as this, should be familiar with HINDU ASTRONOMY in its own proper dress and form. But in order that the missionary student may himself receive the desired improvement from this branch of learning and that he may be prepared to use his acquisitions to the best advantage, it is most obviously necessary that the system be brought out to view, in all its parts, in the light of a true and more perfect system. This is what is aimed at in giving a translation of the work, and in appending the many notes in Tamil and English. With these aids even a native Teacher can bring the whole into profitable com-

இந்தப் புஸ்தகம் வட்டுக்கோட்டையிலுள்ள வித்தியாசாலையின் மாணாக்கரினது கல்விப் பயிற்சிக்கு உபயோகமாகும்பொருட்டுச் செய்யப்பட்டிருக்கின்றது. அதிற் கூடிய எத்திறத்தாரும் இங்கிலீசு பாஷையையும் ஏரோப்பைய சாஸ்திரத்தையும் படித்து வருகிறபடியால் இதையும் இங்கிலீசுபாஷையிலே படித்தல் நன்றாம். ஆயின் நம்மிடத்திற் படித்து நமக்குத் துணைத்தொழில்செய்கிறவர்கள் தங்கள் சனனபாஷையிலேயே பெரும்பாலுங் காரியம் பார்க்க வேண்டியவர்களாகையால், அவர்கள் இந்து சோதீசாஸ்திரத்துடன் அதன் சுய அநிரூபங்களிற்றானே பயின்றிருக்க வேண்டுமென்பதற்குப் பலமுக்கிய நியாயங்களுண்டு. ஆனால் கிறீஸ்தபோதனையில் வளரும் எமது மாணாக்கன் வேண்டிய தேர்ச்சியை இந்நூலிடத்தே தான் விரும்பியமாத்திரமடைந்து அவ்வறிவை லோகோபகாரமாய் உபயோகிக்கும்படி இச்சாஸ்திரத்தின் எப்பகுதிகளுந் தன்னிலும் அதிபூரண சத்திய சாஸ்திர ஒளியில் தெரிவுறக் காட்டப்படவேண்டியது பிரத்தியட்சமாய் மகா அவசியமாமே. இது நோக்கமாகவே இந்நூல் இங்கிலிஷில் மொழிபெயர்க்கப்பட்டுந் தமிழ் இங்கிலீசு இவ்விரண்டிலும் அநேக விசேடவுரைகள் சேர்க்கப்பட்டுமிருக்கின்றது. இவற்றைத் துணையாகக்கொண்டு ஒரு தமிழ உபாத்திதானும் எமது வித்தியாசாலையிற் பயிற்றப்பட்டுவருகிற ஏரோப்பைய

parison with the European System as taught in the Seminary.

A few sections have been appended to the translation, on matters of importance to students in this country, and which are wanting, either in whole or in part, in the text books used in the Seminary.

A few remarks on the Astrology and Astronomy of the Hindus and on the History of the science will not be out of place in this connection. It is highly desirable that each class be fully instructed on these points previously to entering on the study of the work itself.

I. *Hindu Astronomy* is made the foundation of a vast system of *Astrology*. The *real movements* and *relative positions* of the planets, are wrought into a systematic connection with a great variety of arbitrary divisions of the signs of the Zodiac, and of the 27 Lunar Mansions. To these bodies are ascribed various mythological appendages, as beasts, birds, trees, &c. all of which are, of course, woven into the fine spun theory, and help to form, in the view of the deluded wondering mass, a more recondite and imposing system than that of Astronomy itself. Thus is the sublime philosophy of the

சாஸ்திரத்தினுடன் இந்நூல் மு
ற்றையும் பிரயோசனமாக இணை
த்துக்காட்ட வல்லவனாவான்.

இவ்வித்தியாசாலையினிடத்தே
இங்கிலிஷில் வழங்கு நூல்களில்
இத்தேசத்து வித்தியார்த்திகளுக்
கு விசேஷமாய் வேண்டியவற்று
ட் சிலபல குறைவுபட்டிருக்கின்
றதனால் இங்கிலிசுமொழிபெயர்ப்
புடன் சில பகுதிகள் அநுபந்திக்
கப்பட்டிருக்கின்றன.

இந்துக்களின் சோதிடத்தையுஞ்
சோதிசாஸ்திரத்தையும் அவை
களின் வரலாற்றையுங் குறித்து
ச் சில விசேஷங்களை இவ்விட
த்திற் சொல்லில் அது வழுவாகா
து. அன்றியும் இந்நூலைக் கற்
கப்புகுவதன்முன்னே ஒவ்வொ
ரு மாணாக்கனும் இவைகளைத்
தெளிவுறப் படித்தறிந்துகொள்வ
து மிகவும் வேண்டியதாமே

க. இந்து சோதிசாஸ்திரம், மி
க விரிந்த சோதிடத்துக்கு ஆ
தாரமாய்ச் செய்யப்பட்டு இரு
க்கின்றது. சுவேச்சையாய் வ
குக்கப்பட்ட பல கூறான இரா
சிப் பிரிவுகளும் இருபத்தேழு நட்
சத்திரப் பிரிவுகளுமாகிய இவற்று
டன் கிரகங்களின் உண்மையா
ன சாரங்களையும் அவைகள் ஒ
ன்றையொன்று நோக்கி நிற்கு நி
லைகளையுங் கலந்து ஒரு சா
ஸ்திரமாக இயற்றியிருக்கின்றது.
அவைகளுக்கு விலங்கு, பறவை,
தாபரம் முதலிய பல பௌரா
ண உபாங்கங்களுள்ளனவாகச்
சொல்லப்பட்டும், ஆகவே சூட்ச
மாய் இழைத்த கோட்பாட்டுடன்
அவைகள் ஒன்றாய்ப் பின்னப்ப
ட்டும் மருட்பிடித்து ஏம்பலிக்கிற
சனத்தின் பார்வைக்கு சோதி
சாஸ்திரத்தையும் பார்க்க அதிக
புதைபொருளடங்கி ஆச்சரியரூ
பங்கொண்ட சாஸ்திரமாய்த்தோ
ற்றுவிக்கவுந் துணையாகின்றன.
இவ்விதமாய் வானத்தின் மகா

heavens degraded to subserve the cause of a delusive superstition, whose advocates profess to be able to divine future events, and to point out rules to regulate the conduct of man in every stage, and in almost every circumstance, of his existence in this world.

The Astrological dogmas of this country have an important bearing on all the domestic arrangements and practices of the people. They extend to a great variety of popular superstitions, which run out into every department of life. This is seen in the lucky and unlucky months, days, and various other divisions of time, in the horoscope which has a powerful controling influence in the arrangement of marriage, and in many of the particulars in the settlement of families, in the more general prognostics for the year as given in the *Panchankam*, &c. &c. There is probably no part of heathenism which has a more constant and operative influence on all classes of society, than Astrology in its popular developements. Here you may learn much of the *bondage of this people.*

II. *Hindu Astronomy*, viewed as a system, is exclusively *Mathematical*, or

ஞானநூலானது அணுப்பான விபரீதாசாரத்திற்குத் துணைச்செய்யும்படி இழிவுபடுத்தப்பட்டது. அவ்விபரீதாசாரிகளோ வருங்காரியஞ் சொல்லவும், மனுஷனின் ஒவ்வொரு பிராயத்திலும் எக்காரியத்திலும் அவனொழுகுவதற்கான நெறிகளை விதிக்கவும் தாம் வல்லவர்களென்று சாதிக்கிறார்கள்.

இத்தேசத்துச் சோதிட விதிகளைக்கொண்டே சனங்கள் இல்லொழுக்க கிரமங்களை இயற்றுகிறார்கள். மனுஷனின் ஒவ்வொருதொழிலினிடத்துஞ் செறிந்துவழங்கும். அநேகவித விபரீதாசாரங்களை அவ்விதிகள் தழுவி முடிந்திருக்கின்றன. இதற்கு உதாரணமானது சுபமாசதினாதி பலவகைக் காலப் பதுப்புகளிலும், விவாகப் பொருத்தத்தையும், மனைபுகுதற்குரிய பலகாரியங்களையும் ஆண்டுகொள்ளுகிற சாதகத்திலும் பஞ்சாங்கம் முதலியவைகளில் எழுதப்பட்டு வருஞ்சாதாரண வருடபலங்களிலுங் காணலாம். சோதிடஞ் சனங்களுக்குள் வழக்கப்பட்டுவருமளவில் அதற்குச் சமானமாய் அஞ்ஞான மதத்தின் எப்பகுதியானாலுஞ் சகலரையும் நிதமும் ஆண்டுகொள்ளுந் திறமுள்ளதல்லப்போலும். இதினாலே இச்சனத்தின் சிறைத்தனம் இவ்வளவென்று விளங்கிக்கொள்ளலாம்.

உ. இந்து சோதிசாஸ்திரத்தை ஒரு நூலாயெடுத்துப் பார்க்குமிடத்து, அது கணிதநூல்; அல்லது

*Practical.* In Puranic descriptions, however, it assumes different forms, often fantastic and absurdly false. Though Hindu Astronomy, as such, is strictly *mathematical*, yet the system is constructed on very different principles from those on which European systems are based.

The following are among the most obvious points of difference between the Hindu and European systems.

1. In the Hindu system, the sun is reckoned as a *planet*, as strictly so as Venus; while the Earth is considered, directly or indirectly, as the *centre of the system.* This is contrary to demonstrative facts in the Copernican System.

2. In the number and specification of the planets, the *Hindu system* is at variance with the *Copernican.* The Asteroids and Herschell are unknown in Hindu Astronomy; as, also, are the *secondary planets* belonging to Jupiter, Saturn, and Herschell. At the same time, the moon is reckoned among the *primary planets*, and several other *imaginary planets* are introduced, as Raku, Kethu, Kulican, &c.

3. The *mean motions* and *positions* of the bodies in the European system are

செய்காரியநூலே ஆதும். ஆகிலும் அது புராணங்களிற் பெரும்பாலும் கட்டும் ஒவ்வாப்பொய்யுமான பலவேஷங் கொண்டிருக்கின்றது. இந்துசோதி சாஸ்திரம் இவ்விதமாய்க் கணிதநூலாகவே இருந்தாலும், ஏரோப்பைய சாஸ்திரத்திற்கு மூலாதாரப் பிரமாணமும் வேறே, இதன் ஆதாரப் பிரமாணமும் வேறேயாம்.

எளிதின் உணரக் கூடியதாய் இந்து, ஏரோப்பைய சாஸ்திரங்களுக்குட் கிடக்கும் விரோதங்களிற் சிலவருமாறு.—

௧. இந்து சாஸ்திரமானது, சுக்கிரனைப்போலத்தானே சூரியனையும் ஒரு கிரகமென்று சொல்வதன்றிப் பூமியானது மண்டலத்துக்கெல்லாம் மையமென்றும் வெளிப்படையாய் அல்லது குறிப்பாய்ச் சாதிக்கின்றது. இது கோபர்ணிக சாஸ்திரத்திற் சித்தாந்தப்பட்ட காரியங்களுக்கு விரோதமாயிருக்கின்றது.

௨. கோபர்ணிக சாஸ்திரத்திற்கு மாறாக இந்திய சோதிசாஸ்திரங் கிரகங்களின் தொகை பிறழக் கூறுக்கின்றது. வெஸ்தே, சூனோ, சீரீஸ், பல்லஸ், என்னும் அஸ்தருடுக்களும், ஏர்சல் என்னுங் கிரகமும், வியாழன், சனி, ஏர்சல் என்பவைகளுக்குள்ள உபக்கிரகங்களும் இந்திய சாஸ்திரத்தால் அறியப்படவில்லை. அல்லாமலுஞ் சந்திரன் முதற்கிரகங்களில் ஒன்றாகவும், இராகு, கேது குளிகன் முதலிய மனோபாவனை விஷயங்கள் கிரகங்களாகவுஞ் சேர்க்கப்பட்டன.

௩. ஏரோப்பைய சாஸ்திரத்தில் வானசோதிகளின் மத்திமகதியும் மூலத்துருவமும் திடமா

determined by ***at least two actual observations***. But the Hindu assumes that the planets were all in a *line of mean conjunction* with the first point of Aries, according to some systems, at the beginning of Kali Yuga, or according to others, at the beginning of Tuvapara Yuga, at midnight on the meridian of Lanka; now this assumption is neither scientific nor true. For example;–At the commencement of Kali Yuga, the sun's mean longitude was $=10^s\ 1^\circ\ 1'\ 1''$; which involves an error in time, of about two months. Venus' mean Longitude was then$=1^s\ 2^\circ\ 43'\ 46''\cdot6$. This is no small error. Neglecting this error, the mean motion of Venus, in this period, for a year would be$=7^s\ 15^\circ\ 11'\ 52''\cdot8$ which is $29''.165$ too much.

4. The *results attained* on the European method are not only *more accurate*, but much *more numerous*, and, consequently, of a *vastly more practical value*, especially in the sciences of Geography, and Navigation, than what can be attained by the *Hindu method*.

5. The Hindu astronomical *Tables*, in respect to *extent* and *accuracy*, *suffer greatly* in comparison with the European Tables.

ன திருட்டிசோதவன இரண்டேயாதல்கொண்டு நிச்சயம்பண்ணைப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்துசாஸ்திரமோசிலநூற்படி கலியுகாரம்பத்திலே,அல்லதுவேறு நூற்படி துவாபரயுகாரம்பத்திலே அர்த்தராத்திரி வேளையில் இலங்கை மத்தியரேகையினிடத்தே கிரகங்கள் யாவும் மேடமுதற்றனத்தில் மத்தியமயோகமாக நின்றதெனத் துணிவுகூறுகின்றது. இத்துணிவு சாஸ்திரயுத்திக்குஅடுத்ததுமல்லச் சத்தியமானதுமல்லவே. உதாரணம். கலியுகாரம்பத்தில் சூரியனுடைய மத்திமப்புடம் ௧0. இராசியும், ௧. பாகையும், ௧. கலையும், ௧. விகலையுமாயிருந்தது. ஆகவே காலப் பிரமாணத்தால் இதுஇரண்டு மாதமளவுக்குப் பிழைக்கின்றது. சுக்கிரன் மத்திமப்புடமோ ௧. இராசியும், ௨. பாகையும், ௪௩. கலையும் ௪௭. விகலையுமாம். இதுவும் அற்ப பிழையல்ல. இப்பிழையை விட்டு சுக்கிரனுக்கு வருடகதிபார்த்தால் ௭. இராசியும், ௧௫. பாகையும், ௧௧. கலையும், ௫௩. விகலையுமாம். இதில் ௨௯. விகலைஅதிகப்பட்டிருக்கின்றது.

௪. ஏரோப்பைய முறையால் வருஞ் சித்திகள் மிகநுட்பமாயிருக்கிறதுமன்றி அதிதொகையானவைகளுமாயிருக்கின்றன. ஆகையால் இந்திய சாஸ்திரத்தால் வருஞ் சித்திகளைப்பார்க்க அவைகள் விசேஷமாய் பூமிசாஸ்திரம், மாலுமி சாஸ்திரம் என்பவைகளில்மகா பெரிய சாதனோபயோகம் உடையன.

௫. ஏரோப்பைய சோதிசாஸ்திர வாக்கியங்களோடு இணைத்துப்பார்த்தால் இந்திய சாஸ்திர வாக்கியம் விரிவிலும் நுட்பத்திலும் மிகக் குறைவுபட்டிருக்கின்றது.

III. *The following particulars* point out some of the more important facts in the history of this science.

1. Chaldea may be considered the *cradle of Astronomy*, as it was also of the human race. They had a knowledge of the period of 6,585½ days, in which the *moon* makes 223 *revolutions* with regard to the *sun*; 239, with regard to the *apsides* of her orbit; and 241, with regard to her *nodes*. By this they calculated Lunar Eclipses, &c.

They attached great importance to the *theory of the planets*; which bodies they observed with care, and more particularly, *Saturn*.

They divided the *Zodiac* into 12 *signs*; and they had 24 extra Zodiacal constellations—12 in each hemisphere. These have been given to other nations.

To the *Chaldeans*, also, we owe the *duodecimal division of the day*, or that of the 24 hours of the day into twice twelve. They have also the credit of inventing the *Gnomon*.

Apollonius Mindius says, they classed *Comets* with the planets, and were able to determine their motions.

Callisthenes transmitted to Aristotle a *series of ob-*

௩. இப்பால் இச்சாஸ்திர சரிதையிற்சில விசேஷ சங்கதிகள் எடுத்துக் காட்டப்படுகின்றன.

௧. கல்தேயாதேசம் மனுஷ சாதியைத் தாலாட்டினதுபோலவே சோதிசாஸ்திரத்தையுந் தாலாட்டினதென்றெண்ணலாம். ௬௫௮௫½. தினத்திற் சந்திரன் சூரியனிலிருந்து ௨௨௩. மண்டலஞ் செய்கிறதென்றும், துங்கனிலிருந்து ௨௩௯. மண்டலஞ் செய்கிறதென்றும், இராகு கேதுவிலிருந்து ௨௪௧. மண்டலஞ்செய்கிறதென்றுங் கல்தேயர் அறிந்து அதனால் அவர்கள் சந்திரகிரகணம் முதலியவைகளை நிச்சயித்தார்கள்.

கிரகசாரம் மகா முக்கியமுடையதெனக் கொண்டு அக்கிரகங்களை, விசேஷமாய்ச் சனியெனுங் கிரகத்தைச் சாக்கிரதையாய்க் கவனித்தார்கள்.

அவர்கள் பவனசக்கரத்தைப் பன்னிரண்டு இராசியாகப் பிரித்துமேலும் அச்சக்கரத்தில் இருபுறத்திலுமிருக்குங் கோளார்த்தங்களில் ஒவ்வொன்றுக்குப் பன்னிரண்டாக இருபத்துநாலு தாராகணங்களையுங் குறித்திருந்தார்கள். இவைகளை மறு சாதிகளும்பெற்றுக்கொள்ளலாயிற்று.

அல்லாமலும் கல்தேயர்தானே இரவு பகல் பன்னிரண்டு பன்னிரண்டாய்,ஒரு தினத்தைஇருபத்துநாலுஓரைகளாகப் பிரித்தார்கள். அதுவுமன்றி சங்குஸ்தாபன முறையை உண்டுபண்ணினவர்களென்ற கீர்த்தியையும் இவர்கள் உடையவர்கள்

அவர்கள் தூமகேதுக்களையும் கிரக வகுப்பில்அமைத்து அவைகளின்கதிகளை நிச்சயிக்கவல்லவர்களாயிருந்தார்கள் என்று அப்பலோனியுமையோகிதியு என்பவன் சொல்லுகிறன்.

பாபிலோன் நகரத்தை அலே

*servations* made at Babylon during a period of 1,903 years preceding the capture of that city by Alexander. This would carry back the origin of Astronomy in Chaldea to at least 2,234 years before the birth of Christ.

2. The Chinese possess the *oldest authentic records* of Astronomical observations. But this rather proves the antiquity and permanent character of the Government than that they were the *earliest Astronomers.* We may safely suppose that some of the *Chaldean Astronomers*, at the time of the "Dispersion," removed to China, at the founding of that empire. From a similar view of *attested facts* in the history of the world, we must conclude, that *India* might boast of *Astronomers equally early* though she may not now have records to show in proof of it.

The Chinese invented their cycle of *sixty years* very early—their books say, as early as B. C. 2,900.

A *conjunction* of the five planets, is mentioned in the Chinese records as having happened between B. C. 2, 514 and 2,436.

They, like the Indians,

க்குசந்தர் பிடித்துக்கொண்டதற்குமுன்னே ககூOா. வருஷங்களாக வான சோதிகளைக்குறித்து அங்நகரத்திற் செய்யப்பட்டுவந்த திருட்டிசோதனைகளைக் கல்லீஸ்தீனி என்பவன் அரிஸ்தோரில் என்பவனுக்குக் கொடுத்தான். ஆகவே, கிறிஸ்துபிறக்க உஉநூச. வருஷங்களுக்குமுன்னே கல்தேயாவிலே சோத்சாஸ்திரம் ஆரம்பமாயிருந்ததெனக் காணலாம்

உ. சோதிசாஸ்திரத்தில் அதிபூருவமானதாய்த்திடச்சாட்சிபெற்ற திருட்டிசோதனைகள் சீனருக்குள் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால் அவைகள் சீன இராச்சியம் நெடுநாட்பட்டு மாறுதலின்றியிருக்கிறதென்று காட்டுவதன்றி, அச்சாதியார் ஆதிசோதிசாஸ்திரிகளென விளக்காவாம். சாதிகள் சிதறுண்டபோது கல்தேய சோதிசாஸ்திரிகளிற் சிலர், சீன இராச்சியஆரம்பத்திலேதானே அங்கே போனார்களென்று நாம் எண்ணினால் வழுவாகாதுபோலும் இப்படியே இந்தியாவுஞ் சீனத்தைப்போல அதிபூருவ சோதிசாஸ்ரிகளுடைத்தாயிருந்த தென்பதற்கு இப்பொழுது அதனிடத்தில் எழுதப்பட்ட சாதனங்கள் இல்லாதிருந்தும் உலக சரித்திரத்தில் விளங்குஞ் சில சாட்சிகளைக்கொண்டு காரியம் அப்படித்தானே இருந்ததென்று முடிக்கவேண்டும்.

அறுபது வருடச் சக்கரத்தைச் சீனர் வெகுகாலத்திற்குமுன்னே, அவர்களுடைய நூலின்படி கிறிஸ்து பிறக்க உகூ00 வருஷங்களுக்கு முன்னே கட்டினார்கள்.

கிறிஸ்துவின் பிறப்புக்கு முன்னிகழ்ந்த உருகசம் உசாஙகூம். வருஷங்களுக்கிடையிலே ரு. கிரகங்களும் யோகமாவலயாய் நின்றனவென்று சீனருடைய எழுத்துக்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

அவர்களும் இந்துக்களைப்போ

take for *an epoch* a fictitious general conjunction of the planets with the first point in Aries.

They divided the Zodiac into 27 *constellations or Nacshastras* as well as into 12 *signs*

There is some little reason to believe that they could predict eclipses (probably by the Chaldean cycle of 19 years) as early as B. C. 2,128,—though for 10 centuries after that, there is no record of any eclipse to be found. In the year 1,100 B. C. several observations were made. Several eclipses are recorded as having happened between B.C. 720 and 481.

Complete treatises on *Astronomy*, dating back as early as the year B. C. 108, are still in existence. The treatise of *Licon-hur* was formed about B. C. 104. The *epoch* of his tables is a *general conjunction* of the sun, moon, and planets, the moon being on the ecliptic, about 143,127 years, before the year 104 B. C., according to their Chronology. This, undoubtedly, was obtained by calculating backwards from the years 104 B. C. (his real epoch) with the mean motions found for the differ-

ல மேடமுதற்முனத்திற் கிரக
ங்கள் யாவும் பொதுயோகமாய்
நின்றனவென்று மனோபாவனை
யாய் நிச்சயித்து அவ்வேளையை
யுகாரம்பமாய் வைத்துக்கொண்
டார்கள்.

இராசி மண்டலத்தை அவர்க
ள் உஎ. நட்சத்திரங்களாகவும்
பன்னிரண்டு இராசிகளாகவும்
பகுத்திருக்கிறார்கள்.

அவர்கள் கிறிஸ்துபிறக்க உகஉஅ.
வருடங்களுக்கு முன்னே கல்தே
யருடைய ககூ.வருடசக்கரத்தை
க்கொண்டாக்குங் கிரகணங் க
ணிக்கக் கூடியவர்களாயிருந்தார்
களென்று நம்பச்சற்றேயிடமுண்
டு. ஆகிலும் அதற்குப்பின் பத்து
ச் சதகங்களாகக் கிரகணசோ
தனைசெய்தார்களென அவர்கள்
எழுத்துக்களிற் கண்டதில்லை. கி
றிஸ்துவுக்கு கக00. வருடங்களுக்
குமுன்னே பல கிரகணங்கள் தி
ருட்டிசோதனை செய்யப்பட்ட
ன. அவைகள், கி–மு. எஉ0ம்.
சஅகம். வருஷங்களுக்கிடை
யே சம்பவித்தனவாய் எழுதப்பட்
டிருக்கின்றன.

கி–மு. க0அ. வருஷத்திற்பூரண
மாய் எழுதப்பட்ட சோதிசாஸ்திர
நூற்கள் இப்பொழுதும் இருக்கின்ற
ன. இலகன்காருடைய நூல், கி–
மு. க0ச. வருஷத்திலேசெய்யப்ப
ட்டது. சீனருடைய காலநிருபண
விளக்கத்தின்படி கி–மு.க0ச. க்கு
முன்னுள கசங,கஉஎ. வருடமள
வில் சூரிய சந்திரருங் கிரகங்களு
ம் யோகமாவலயாய் நின்றனவா
கவுஞ் சந்திரன் கிராந்திமண்டல
த்தில் நின்றதாகவுங் கொண்டு
அவன் வாக்கியஞ் செய்திருக்கிற
ன். கிரகங்களின் மூலத்துருவம்
கி–மு. க0ச. வருஷத்திலே நிச்ச
யித்திருந்தும், அவைகளின் மத்தி
ம கதியைகொண்டு அவ்விரண்
டிற்கு முன் எப்பொழுது யோகமு
ண்டானதெனக் கணிதம்பண்ணி

ent planets, till a general conjunction was obtained.

3. The early part of *Hindu Astronomy* is involved in *great obscurity*. It is, however, believed that it may be traced to Chaldea. There are several Epochs in Hindu Astronomy which have been distinctly marked out.

(1.) The *Lunar Mansions, or Nacshastras* are the most ancient part of Hindu Astronomy found on record. They date somewhere between the years 1528 and 1371 B.C. This may be considered the *first Epoch* in Hindu Astronomy.

(2.) The *second Epoch* may be considered as commencing in the year 1181 B. C. "At this epoch," says Mr. Bentley, "Hindu Astronomy begins to assume a more regular form. Many improvements were made, the solar months were formed and received their names, another set of lunar mansions was introduced depending on the tropical revolution of the sun, corresponding in name and number with those of the Zodiac, and the six seasons of the year established on unalterable principles, which with the months, depended also on the tropical revolution of the sun."

யறியப் பட்டதென்பதற்குச் சந்தேகமில்லை.

௩. இந்து சோதிசாஸ்திரத்தின் பூருவ சரித்திரம் மிகமலைவுள்ளதாயிருக்கின்றது. ஆகிலும் அது முதன் முதல் கல்தேயாவிலிருந்து வந்திருக்கலாமெனச் சாதிக்கப்படுகின்றது. இந்து சோதிசாஸ்திரத்திலே வெளிப்படையாய்த் தோற்றும் பல துருவங்களுண்டு.

௧. எழுத்துக்களிற்காண்கிறபடி இந்திய சோதிசாஸ்திரத்தில் அதிபூருவப்பட்டதாய்த் தோற்றுவது நட்சத்திரங்களைப்பற்றியே. இவைகள், கி—மு. ௧௫௨௮ம். ௧௩௭௧ம். வருஷங்களுக்கிடையிலேவகுக்கப்பட்டனவெனக் காண்கின்றது. இந்திய சோதிசாஸ்திரத்தில் இதுவே முதற்றுருவம் என்றெண்ணலாம்.

௨. இரண்டாந்துருவம், கி—மு. ௧௧௮௧ம். வருஷத்திலே தொடங்கினதாக நினைக்கலாம். இந்தத் துருவத்திலே இந்து சோதிசாஸ்திரம் ஒழுங்கு பற்றிய நூலாகத் தொடங்கி வெகு தேற்றமடைந்ததென்றுஞ் சௌரமாதங்கள் வகுக்கப்பட்டு அவைகளுக்குரிய நாமங்களைப் பெற்றனவென்றும் இராசிமண்டலத்து நட்சத்திரங்களுக்கு எண்ணிலும் பெயரிலுஞ் சரியாக சூரியனின் அயன ஆண்டைப்பற்றியதாய் வேறு கூட்டமான நட்சத்திரங்கள் ஏற்படுத்தப்பட்டனவென்றும் மாதங்களுடனே சூரியனின் அயன ஆண்டைப்பற்றியிருக்கும் ஆறுபருவங்களையும் விகாரப்படமாட்டாத நெறியைக் கொண்டு நிலைப்படுத்தினார்களென்றும் பென்றிலிசொல்லுகிறான்.

The astronomers of this period, after having formed and named the Hindu months as above mentioned, framed a *cycle* of *five years*, for civil and religious purposes, in which they reckoned:

| | |
|---|---|
| Natural days or degrees | 1,800 |
| Mean solar days | 1,830 |
| Lunar days or Tithis, (of 30 to a lunation) | 1,860 |
| Lunar Sidereal days | 2,010 |
| The number of lunations, therefore, $=\frac{1860}{30}=$ | 62 |
| The year, $\frac{1830}{5}=$ | 366 |

The lunation, $=\frac{1830}{62}=29d.$ $12h.$ $23m.$ $13s.$

The *difference* between the *shortest* and *longest day* was *one hour and thirty-six minutes*, which serves to point out the latitude of the place, which was between 13° and 14° N.

Mr. Bentley seems to have ascertained that the *Ramayana* was written 940 B. C., that Rama was born 961 B. C., that the "*Churning of the Ocean*," a figurative representation of an *eclipse*, occurred 25th *October*, 945 *B. C.* This whole story of the *war* between the *Gods* and *Giants*, was, about 200 years afterwards, new-modelled and improved by Hesiod and others.

முன் சொன்னதுபோல இக்காலத்துச்சோதிசாஸ்திரிகள் மாதங்களை வகுத்துப் பெயரிட்டதின்மேல் தேசசமயாசாரங்கள் காரணமாக, ௫ வருடசக்கரமொன்றைக் கட்டினார்கள்.

அச்சக்கரமொன்றுக்கு,

| | |
|---|---|
| சாவனதினம் | ௧௮00 |
| மத்திமசௌரதினம் | ௧௮௩0 |
| தீதி | ௧௮௬0 |
| நட்சத்திரசாந்திரதினம் | ௨0௧0 |

ஆகையால் இச்சக்கரத்துக்குக் கூடிய சாந்திர மாதங்கள் ௬௨ = ௧௮௬0 / ௩0 ஒருவருடப் பிரமாணமான தினம், ௩௬௬ = ௧௮௩0 / ௫

ஒரு சாந்திரமாதப் பிரமாணம் தினம், ௨௯. நாடி, ௩0. விநாடி, ௫௮. தற். ௨ = ௧௮௩0 / ௬௨

தீர்க்கதினம் இலகுத்தினங்களுக்குள்ள வித்தியாசம் நாடி, ௩. விநாடி, ௪௨. தற். ௩0. இது ஸ்தான அட்சபாகத்தைக்குறித்துக்காட்டுகின்றது; ஆகவே உத்தராட்சம், ௧௩ம். ௧௪ம். பாகங்களுக்கிடையிலே அதிருந்தது.

இராமாயணம், கி–மு. ௯௪0ம். வருஷத்திலே எழுதப்பட்டதென்றும் இராமர், கி—மு. ௯௬௧ம். வருஷத்திலே பிறந்தாரென்றும், ஒரு கிரகணசம்பவத்துக்கு உவமையான பாற்கடல்கடைதல், கி·மு. ௯௪௫ம். வருஷத்திலே ஐப்பசி மாதம், ௨௫ந். தேதி நடந்ததென்றும் தேவ அசுர யுத்த சங்கதி ஏறக்குறைய, ௨00. வருஷங்களுக்குப் பின்னுல் எசியோட் முதலியவர்களாற் புதுமாதிரியாய் வருணிக்கப்பட்டதென்றும் பென்றிலி சொல்லுகிறுன்.

It appears also, that the Astronomers of this period (945 B. C.,) among other things, had determined the *rate of precession of the equinoxes*, which they found to be 3° 20′ in 247 Hindu Tropical years, and one month; in consequence of which determination, they settled the commencement of the former period, and made it the first of Sittirei, in the year 1192 B. C.

They found that, in this period of 247 years and one month, in which the sun made 247 revolutions and one sign over, the moon made 3,303 revolutions and one sign over, and that there were 3,056 lunations complete, and that the number of days in the whole period was $90{,}245\frac{1}{2}$.

Hence we get—Length of the Tropical year=365*d.* 5*h.* 50*m.* 10*s.*$\frac{98}{593}$

Length of the Sidereal year =365*d.* 6*h.* 9*m.*52*s.*$\frac{3568}{6671}$

Length of a lunation=29*d.* 12*h.* 44*m.* 3*s.*

Moon's tropical revolution =27*d.* 7*h.* 43*m.* 5*s.*

Mean annual precession = 48″· 56661.

Sun's mean motion for 365 days=11*s.* 29° 45′ 37″

கி—மு. ௯௪௫ம். வருஷத்திலே இருந்த சோதிசாஸ்திரிகள் அயனாண்டு, ௨௪௭. மாதம், ௧.இலே அயனசலனம், ௩. பாகையும், ௨0. கலையுமென்று தீர்மானித்திருந்தார்களென்றுந் தோற்றுகின்றது. அத்தீர்ப்பைக்கொண்டு, கி—மு. ௧,௧௯௨ம். வருஷத்திலே சித்திரை மாதம் முதற்றேதியிலேதான் முந்தினதுருவாரம்பமென்று கண்டு வைத்துக்கொண்டார்கள்.

சூரியன்,௨௪௭. தரஞ்சுற்றி மேலே ஒரு இராசியைக் கடந்த காலமான, ௨௪௭. வருஷத்துக்குள்ளும்,ஒருமாதத்துக்குள்ளும் சந்திரன், ௩, ௩0௩. தரஞ்சுற்றி மேலே ஒரு இராசியைக் கடந்ததென்றும், அதில், ௩0௫௬. சாந்திரமாதங்கள் முடிந்தனவென்றும் அதில் அடங்கிய தினம், ௯0,௨௪௫½. என்றும் அவர்கள் கண்டார்கள்.

ஆகையால்,

அயனஆண்டுப்பிரமாணம் தினம், ௩௬௫. நாடி,௧௪. விநாடி, ௩௫. தற்பரை, ௨௫. நட்சத்திரவருடப்பிரமாணம் தினம், ௩௬௫. நாடி,௧௫. விநாடி, ௨௪. தற்பரை, ௪0. சாந்திரமாதப்பிரமாணம் தினம், ௨௯. நாடி,௩௧. விநாடி.௫0. தற்பரை, ௭. சாந்திர அயன மாதம், தினம், ௨௭.நாடி, ௧௯. விநாடி, ௧௭. தற்பரை, ௪0. வருடாந்தமத்திம அயனசலனம்,௪௮½. விகலை ௩௬௫. தினத்தில்,சூரியமத்திமகதி, ௧௧. இராசி, ௨௯. பாகை, ௪௫.கலை,௩௭. விகலை. சந்திரமத்திமகதி, ௧௩.

Moon's mean motion for $365d. = 13r. 4s. 9^\circ 22' 57''$.

(3.) The *third astronomical Epoch* began in the year 698 B. C. At the commencement of this period, the precession amounted to 6° 40′. All the months, seasons, colures, and moveable or tropical lunar mansions, were now found to have receded, in respect to the positions they had in 1192 B. C., by that quantity=6° 40′

(4.) The *fourth astronomical Epoch* began on the 27th November, 451 B. C. The only *important observation* in this period, on record, was in the year 215 B. C., when, at the winter solstice, the sun and moon were in conjuction on *Sunday*, at sunrise in the beginning of the 22d lunar asterism, *Tiruvonum*. This observation was the foundation of the festival called the "Arttothaya." This is the great ceremony which occurs at *Ramesuram* once in about sixty years.

(5.) The *fifth Epoch* dates from the 25th December, 204 B. C., when the *precession* amounted to a whole lunar mansion, or 13° 20′, reckoning from the year 1, 192 B. C., when it was no-

வட்டம், ௪. இராசி, ௯. பாகை, ௨௨. கலை, ௫௭. விகலை.

௩. மூன்றாந்துருவம், கீ-மு. ௬௯௮ம் வருஷத்திலே ஆரம்பித்தது. இத்துருவாரம்பத்தில், அயனசலனம் பாகை, ௬. கலை, ௪௰. மாதங்கள், பருவங்கள், அயனமண்டலங்கள், அயன நட்சத்திரங்கள் எனும் இவையெல்லாம், கீ-மு. ௧௧௯௨ம். வருஷந்திலே நின்ற நிலை விலகி, ௬. பாகை, ௪௰. கலைக்குப் பின்னிட்டு நின்றனவென இக்காலத்தில் அறியப்பட்டது.

௪. சோதிசாஸ்திரத்தைச்சார்ந்த நாலாந்துருவம், கீ-மு. ௪௫௧ம். வருஷம் கார்த்திகைமாதம் ௨௭ந் தேதியிலே ஆரம்பித்தது. இத்துருவத்திற்குள்ளான, கீ-மு. ௨௧௫ம். வருஷத்திலே செய்யப்பட்ட திருட்டிசோதனை ஒன்றேமாத்திரம் எழுதப்பட்டிருக்கின்றது. அப்போது தக்கணாயனத்தில் ஞாயிற்றுக் கிழமை சூரியோதயத்துத் திருவோணாரம்பத்தில் சூரியனுஞ் சந்திரனும் ஒருயோகமாக நின்றன. இத்திருட்டிசோதனைதானே அறுபது வருடத்துக்கொருமுறை இராமேச்சுவரத்திற் கொண்டாடுகிற அர்த்தோதயம் என்னப்படும் பெரிய மாமாங்கத்துக்குக் காரணமாயிருந்தது.

௫. ஐந்தாந்துருவம், கீ-மு. ௨௰௪ம். வருஷம் மார்கழிமாதம் ௨௫ந் தேதி முகனையாக எண்ணப்படுகிறது. அப்பொழுது அயனசலனம் ஒரு நட்சத்திரத்திற்குச் சரியாயிருந்தது. அதாவது, அயனசலனம் இல்லாத, கீ-மு. ௧௧௯௨ம் வருஷம் தொடுத்து எண்ணிக்கண்ட பாகம், ௧௩. கலை, ௨௰. ஆம். இத்துருவ

thing. At or about this period, improvements were made in Hindu Astronomy, *new and more accurate tables* of the planetary motions and positions were formed, and equations introduced.

Besides these improvements, the *Hindu history* was divided into *periods* for chronological purposes, which *periods*, (in order that they might never be lost, or, if lost or disputed, might, with the assistance of a few data be again recovered)—were settled and fixed by *astronomical computations* in the following manner:— The years, with which each period was to commence and end, having been previously fixed on, the inventor by computation, determines the month, and moon's age on the very day on which Jupiter was found to be in conjunction with the sun, in each of the years so fixed on; which being recorded in the Calendar and other books, might at any time be refered to for clearing up any doubt, in case of necessity.

It was from these conjunctions of the sun with Jupiter, that the periods themselves were named *Yugas*, or conjunctions, and the order in which they were

காலாந்தத்தில், இந்து சோதிசா
ஸ்திரந் தேற்றம்அடைந்து நவமு
ம் அதிநுட்பமுமான கிரகசார மூ
லத்துருவவாக்கியங்கள் கட்டப்
பட்டன. திருத்துவாக்கியங்களு
ஞ் சேர்க்கப்பட்டிருந்தன.

மேற்கூறியதேற்றங்களை ஒழிய
காலநிருபணவிளக்கத்துக்காக இ
ந்திய சரித்திரங் காலாந்தரபகுப்ப
டைந்தது.இந்தக்காலாந்தரங்கள்
மங்கிப்போகாதபடிக்கும்அல்லது
மங்கினாலாவது ஆட்சேபிக்கப்ப
ட்டாலாவது சில சாதனங்களை
க்கொண்டு மறுபடியும் அறியும்
பொருட்டாகவும், பின் வருமாறு
சோதிசாஸ்திர கணித மூலமாய்
அவைகள் தீர்மானமாய் ஸ்தாபி
க்கப்பட்டன. ஒவ்வொரு காலா
ந்தரத்துக்கும் ஆதியந்த வருடங்க
ளை முன்னுற அறிந்துகொண்டு
அவ்வவ்வருஷத்திலே குரு பரிதி
யோகமான தினத்துக்குச் சரியா
ன மாதந் திதியின்னவென்று க
ணிதத்தினால் கற்பிக்கப்பட்டது.
இவைகள் பஞ்சாங்கத்திலும், ம
ற்ற நூல்களிலும் எழுதப்பட்டிரு
ப்பதால் வேண்டிய காலத்து ஐ
யந்தெளிதற்பொருட்டு அவைக
ளைப் பார்த்துக்கொள்ளலாம்.

குருபரிதியோகமானபடியினாலே
தான் இந்தக் காலாந்தரங்களுக்
கு யுகமென்று பெயர். அந்த யு
கங்களுக்குப் பெயரிடப்பட்ட கிர
மமாவது, இந்த யுகங்களைக் கற்
பித்த ஆசிரியனுக்கு முந்தின கா

named was this:—The first period immediately preceding the inventor, was called the *Kali Yuga*; the second, or next preceding, was called the *Dwapara Yuga*; the third was called *Treta Yuga*; and the fourth or the furthest back from the author, was called the *Kreta Yuga*, with which the creation began. The end of the first period, called the *Kali*, was fixed by a conjunction of the sun, moon and Jupiter, in the beginning of Cancer, on the 26th June, 299 B. C. This was called the *Satya Yuga*, or true conjunction, and is the radical point from which the calculation proceeds.

Having thus far explained the principles on which the four ages of the ancient Hindus were founded and settled, I shall now exhibit them complete, with all their dates in the following table;

லாந்தரம் முதல்யுகம் அல்லது கலியுகமெனவும், அதற்கு முந்தின இரண்டாங் கலாந்தரம் துவாபரயுகமெனவும் அதற்கு முந்தின மூன்ருங் காலாந்தரம் திரேதாயுகமெனவும் கடை நின்ற நாலாங் காலாந்தரங் கிரேதாயுகம் எனவும் பெயர்பெற்றன இந்தக் கிரேதாயுகாரம்பத்திலேதான் உலகஞ் சிருட்டிக்கப்பட்டது. முதற் காலாந்தரமாகிய கலியுகாந்தம், கற்கடகாரம்பத்திற் பரிதீ குருசந்திர யோகமான, கீ-மு. ௨௯௯ம் ௵. ஆனிமீ. ௨௬ந்தேதி என நியமப்பட்டது. இதுவே சத்திய யுகம் எனப்படுவது. இதுவே மூலமாகச் சகல கணிதமும் நடைபெறும்.

இவ்வளவும் பூருவ இந்துக்களுடைய சதுர்யுகங்களைக் கற்பித்து ஸ்தாபித்த வரலாற்றை விளக்கிப் பின்னுகை வருகிற சக்கரத்தில் அவைகளை விவரமாய்க் காலக்கணக்கின்படி காட்டுகிறேன்.

| Names and order of the four ages. | Dates. | Moon's age and Month. | Error in the Hindu tables used. | | |
|---|---|---|---|---|---|
| Kreta or fourth, | 19th April 2,352. B.C. | 3d Tithi of Vaisaka | About | 21° | 46′ |
| Treta or third, | 28th Oct. 1,528. " | 9th of Kartika | " | 13 | 1 |
| Dwapara or 2d. | 15th Sept. 901. " | 28th of Bhadra | " | 6 | 22 |
| Kali or first, | 8th Feb. 540, " | 15th of Magha | " | 2 | 33 |
| —ended, | 26th June 299. " | 1st. of Sravana | " | 0 | 1 |

| சதுர்யுக நாமகி ரமங்கள். | தேதி. | தீதி, மாதங்கள். | இந்து வாக்கியப் பிழை. |
|---|---|---|---|
| கிரேதாயுகம் நாலாவது | கி—மு உ௲௫உ ஹு. சித். மீ௳ ௧௬௨. | ௲ந். தீதி வைசாகம் | ஏறக்குறைய உ0° ௪௬′ |
| திரேதாயுகம் மூன்ருவது | கி—மு ௧௫உ௮ ஹு. ஐப். மீ௳ உ௮௨. | ௬ந் தீதி கார்த்திகை | " ௧௲° ௧′ |
| துவாபரயுகம் இரண்டாவது | கி—மு ௬0௧ ஹு, புரட். மீ௳ ௧௫௨. | உ௮ந். தீதி பாத்திரம் | " ௬° உஉ′ |
| கலியுகம் முதலாவது | கி—மு ௫௪0 ஹு. மாசி மீ௳ ௮௨. | ௧௫ந். தீதி மாகம் | " உ° ௲௲′ |
| கலியுகமுடிவு | கி—மு உ௬௬ ஹு. ஆனிமீ௳ உ௬௨. | ௧ந். தீதி சிராவணம் | " 0° ௧′ |

The *year* of the Hindu creation, or beginning of the *Kreta Yuga,* corresponds exactly with the year of the Mosaic flood. This shows the opinion of the Hindus in respect to the creation at that time, 204 B. C.

(6.) "*The sixth Astronomical period,* began on the 23rd January, A. D. 54; when observations were made, and the positions of the planets for that epoch together with their mean motions, were corrected, when necessary."

"About A. D. 51, Christianity was preached in India by St. Thomas." This gave rise to the periods called *Manwantaras* or *patriarchal periods.*—The dates of their respective commencement being fixed by the computed conjunction of *Saturn* with the *Sun,* in the same manner as those of the *four ages* given above

இந்துக்கள சொல்லுகிற சிருட்டி ஆரம்பம்அல்லது கிரேதா யுகத்தொடக்கம் மோசே எழுதியிருக்கிற சலப்பிரளய காலத்துடனிணங்கி வருகின்றது. இது கி—மு. உ0சம். வருஷத்திலேயிருந்த இந்துக்கள் உலகத் தோற்றத்தைப்பற்றிக் கொண்ட கோட்பாட்டைக் காட்டுகின்றது.

௬. ஆருஞ் சோதிசாஸ்திரத்துருவம், கி—பி. ௫சம். வருஷம் தை மாதம், உ௲ம். தேதியிலே ஆரம்பித்தது. அப்போது திருஷ்டிசோதனைகள் செய்யப்பட்டு வேண்டிய இடங்களில் கிரகங்களுக்குத் தற்கால மூலத்துருவங்களும், மத்தீம கதிகளுந் திருத்தப்பட்டன.

கி—பி. ௫௧ம். வருஷமளவிலே கிறிஸ்தமதத்தை இந்தியாவிலே தோமாவென்பவர் பிரசங்கித்தார். அதுகாரணமாகத்தான் மன்வந்தரங்கள் என்னுங் கால வகுப்புண்டாயின. மேலே சொல்லிய நாலு யுகங்களும் துருபரிதியோகங்களினல் நிறுத்தப்பட்டிருந்தது போல ஒவ்வொரு மன்வந்தரத்தொடக்கங்களுஞ் சனி பரிதியோகங்களினல் குறிக்கப்பட்டி

were fixed by the conjunctions of *Jupiter* and the Sun.

This was done in order to extend the numbers in Hindu Chronology beyond those of the Christian.

(7.) The *seventh Epoch* was about A. D 291. There are no observations of importance during this period, which extends to A. D. 538.

(8.) The *eighth Epoch* was about A. D. 538. This is the epoch of the *Brahma Siddhanta*, and is one of great importance in both the history and Astronomy of the Hindus. Measures were then taken by the Brahmans for removing the land marks of their ancient History, and for introducing the enormous periods of the *Calpas* &c. (See Bentley's Hindu Astronomy, pp. 83—92.)

The *Surya Siddhanta*, claimed by the Hindus as one of their most ancient works, is proved to have been written about A. D. 1068.

*Bhaskara* wrote his system about A. D. 1150. This is one of the most rational systems of Astronomy extant in India. It is not known to the people in this part of the country, but deserves to be transferred to the Tamil language. *Bhaskara* is the reputed author

ருக்கின்றன. இது இந்திய காலாந்தரங்கள் கிறிஸ்த காலாந்தரங்களுக்கும் முற்பட்டனவென்று காட்டும்படி செய்யப்பட்டன.

௭. எழாந் துருவம், கி—பி. ௨௯௧ம். வருஷமளவிலே தொடங்கினது. கி—பி. ௫௩௮ம். வருஷத்திலே முடிகிற இந்தக்காலாந்தரத்தில் முக்கியமான திருஷ்டிசோதனைகள் செய்யப்படவில்லை.

௮. எட்டாந் துருவம், கி—பி. ௫௩௮ம். வருஷமளவிலே தொடங்கிற்று. இதுவே பிரமசித்தாந்தமுண்டான காலமாயும், இந்தியரின் சரித்திரஞ் சோதிசாஸ்திரமென்ற இவ்விரண்டிலும் மிகமேன்மை பெற்றதாயும் இருக்கின்றது. அக்காலத்திலேதானே பூருவ சரித்திரத்தின் எல்லைகளை விலக்கிப்போடவும் கற்பங்கள் முதலிய நெடுங்காலாந்தரங்களை விதிக்கவுமாகப் பிராமணர் உபாயங்களை உண்டுபண்ணினார்கள். இவற்றைக் குறித்துப் பென்றிலியென்பவனுடைய இந்து சோதிசாஸ்திர சரிதையில், ௮௩—௯௨. பக்கங்களிற் காண்க.

இந்துக்கள் பூருவ நூல்களுளொன்றென்று சாதிக்கிற சூரிய சித்தாந்தம், கி-பி. ௧௦௬௮ம். வருஷத்திலே எழுதப்பட்டதாக ரூபிக்கப்பட்டிருக்கின்றது.

பாஸ்கராசாரியர் தனது நூலை கி—பி. ௧௧௫௦ம். வருஷமளவிலே எழுதினார். இந்தியாவிலே வழங்குகிற சோதிசாஸ்திர முறைகளுக்குள் இது அதிக உத்தம நெறிபற்றியிருக்கின்றது. இத்தேசப் பகுதியிலிருக்கிறவர்கள் அதையறியார்கள் ஆகையால் அது தமிழில் மொழிபெயர்க்கப்படத் தகுந்த நூலாயிருக்கின்றது. பாஸ்காரசாரியர் மேன்மை பெற்ற

of the *Vija Ganita*, a valuable treatise on the elements of Algebra. In this work is found the principle of the rule for the solution of affected Quadratic Equations.

The *Arya Siddhanta*, a system much used in southern India, was formed about A. D. 1322. It differs from the Gregorian reckoning *one day* in *sixty years*, making the year 365*d*. 15நா. 31வி. 15த.= 365*d*. 6*h*. 12*m*. 30*s*.

In this volume, the leading system is that of *Ullamudiam*. Its epoch, which can be easily made out from the work itself, is A. D. 1234. It is pretty well known in this Province. This system has been selected, because it is more complete than most others here extant, and as being a fair specimen of this branch of Hindu science. On some points in which it is less accurate, selections have been added from other authors. These additions are sufficiently marked and explained where they occur.

A whole section has been added on *Planetary Phenomena*, from the work of *Vararwchi*, who wrote under the patronage of King *Sakarasasekaran*, about A. D. 1506. This is by the *Vakya* process, and is that

வீசகணித ஆக்கியோனெனப்பெயர்பெற்றவர். இதில் வருக்க சமீகரண விதி சொல்லப்பட்டிருக்கின்றது.

தென் இந்தியாவிலே அதிகமாய் வழங்குகிற ஆரியசித்தாந்தம் என்னும் நூல், கி-பி. ௧௩௨௨ம். வருஷமளவிலே உண்டாக்கப்பட்டது. ௩௬௫. நாள். ௧௫. நாழிகை. ௩௧. விநாழிகை. ௧௫. தற்பரை என வருடப்பிரமாணங் கூறுகின்ற இந்த நூலானது ௬௦. வருடத்துக்கு, கிரேக்கோரியினது முறைப்படி எண்ணிறல் ஒருதினம் விலகும்.

நாம் இவ்விடத்திலே எடுத்துக்கொண்ட நூல்களுள் உள்ளமுடையான் செய்த நூலே விசேஷப்பட்டது. அது, கி-பி. ௧௨௩௪ம். வருஷத்திலே உண்டாக்கப்பட்டது. இது அந்நூலைக்கொண்டுதானே நீச்சயம்பண்ணியிருக்கிறது. இந்நாட்டார் இந்நூலையே விசேஷமாய் அறிந்திருக்கிறார்கள். உள்ளமுடையான், இவ்வூரில் வழங்கும் வேறநேக நூல்களிலும் அதிக பூரணப்பட்டதாயும், இந்து சோதிசாஸ்திரத்தை விளக்கு நல்லுதாரணமாயும் இருப்பதால் அதனையே தெரிந்துகொண்டோம். அதிற் சிலகாரியங்கள் நுட்பமாயிராததால் அதை நிரப்புகிற தற்காக வேறு நூல்களிலிருந்து சில சேர்க்கப்பட்டிருக்கின்றன. சேர்க்கப்பட்ட இவைகளென் வரும்டங்களில் எல்லாம் வேண்டியவளவு விவரமாய்க் குறித்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

கி-பி. ௧௫௦௬ம். வருஷமளவில்செகராசசேகரனென்னும் இராசனுடைய அநுமதிப்படி வரருசி என்பவரால் செய்யப்பட்ட கிரகசார எண்ணல் இதனுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இது வாக்கிய

which is now usually adopted by native Astronomers in this Island, as being the most accurate in its results.

On the subject of *Eclipses*, a modern compilation has been subjoined made by a native Astronomer of this Province. The epoch of this work is A. D. 1788; though doubtless since modified andcorrected, in many particulars, as, from time to time, facts required. It is written in plain prose style. It bears the title *Vakya Karanam,* being constructed on the principles of the *Vakya* process. It seems to have been taken chiefly from a more ancient work of the same name; but is rendered more correct by means of the light which European science has shed in the land. The process of correcting has been gradual; and most of the changes were undoubtedly made within the last few years. The author, who lived within two miles of the Batticotta Seminary, died in A. D. 1845. Many of the improvements in this work, are unquestionably, to be accredited, directly or indirectly, to the instruction given in this Institution.

The *Tables* given in this work are those which are used in this Province. They have been carefully compar-

கரணமுறை. இத்தீவிலிருக்குஞ் சோதிடர்கள் இதின் வழியாய் அதிக நுட்பமான பலங்களைக் காணலாமென்று பெரும்பாலும் இதையே எடுத்துக்கொள்ளுகிறார்கள்.

கீரகணமுறைகளுள், சிறிதுநாட்களுக்கு முன் இந்நாட்டிற் பிறந்த சோதிசாஸதிரியினாற் செய்யப்பட்ட ஒரு முறை சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதன் துருவ ஆண்டு, கி-பி. கஎஅஅ. அது உரைத்தமிழால் எழுதப்பட்டிருக்கின்றது. வாக்கிய விதியைக்கொண்டு செய்யப்பட்டிருக்கிறபடியால் அதற்கு வாக்கிய கரண கிரகணம் என்றுபெயர். அப்பெயர்கொண்ட ஒரு பழைய நூலிலிருந்தெடுக்கப்பட்டு இத்தேசத்தில் வழங்கிவருகிற ஏரோப்பைய சாஸ்திர அறிவைக்கொண்டு அதிகந் திருத்தப்பட்டிருக்கின்றதுபோலும். அதுவும்வரவரக்காலத்துக்குக்காலந்திருத்தப்பட்டிருக்கின்றது. சந்தேகமின்றிச் சென்ற சிலவருடங்களுக்குள்ளாகத்தான் மிகுமாறுதல்கள் பண்ணப்பட்டிருக்கின்றன. வட்டுக்கோட்டையிலுள்ள வித்தியாசாலையிலிருந்து இரண்டு மையிலுக்குள்ளாகவிருந்த அதன் ஆக்கியோன், கி-பி. கஅசரும். வருஷத்திலே இறந்துவிட்டார். அந்நூலினிடத்தே தோற்றும் அநேக தேற்றங்கள் இந்தவித்தியாசாலையிற் பயிற்றப்பட்ட கல்வியினால் ஏதோ ஒருவழியாய் ஆனவை என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தப் புஸ்தகத்திலிருக்கிறவாக்கியங்கள் இந்நாட்டிலே வழக்கமானவைகள். தமிழிலுஞ்சங்

ed with different copies in both Tamil and Sanscrit. The same are given, in connection with the translation in the European form and character.

A few European Tables, such as are required for the second part of this volume, are added.

It is the decided opinion of the preparer of this work, that the study of this branch of science has proved an important means of liberalizing the minds of the students and of loosening and removing bonds of superstition. But the study has hitherto been pursued at disadvantage, for the want of text books, each student being obliged to write out the lessons from dictation.

It is believed that the present publication will not only facilitate progress in this branch of learning, but also, render the study more practically useful.

*Batticotta*, 1847.

கிருதத்திலுமுள்ள பலபிரதிகளுடன் இவைகள் நுட்பமாய் ஒத்துப் பார்க்கப்பட்டிருக்கின்றன. அவ்வாக்கியங்கள் தானேஏரோப்பைய முறையாயும் மாதிரியாயும் இங்கிலிசு மொழிபெயர்ப்புடன் அணைக்கப்பட்டிருக்கின்றன.

இப்புஸ்தகத்தில் இரண்டாம்பகுதிக்கு வேண்டியனவாயிருக்குஞ் சில ஏரோப்பைய வாக்கியங்களும் இணைக்கப்பட்டிருக்கின்றன.

இச்சாஸ்திரத்தைப் படிப்பது மாணாக்கரது மனங்கள் விரியவும் விபரீதாசாரபாசங்கள் அவிழ்ந்தகலவும் முக்கியஏதுவாமென்பது ஆக்கியோனுடைய தெளிந்த கருத்தாம். இது வரைக்கும் அச்சுப் பிரதிகள் இல்லாததால் வாய்ச்சொல்லாய்க் கேட்டெழுதிப்படித்து வந்தது மாணாக்கருக்குபயோகப்படவில்லை. இந்நூல் இச்சாஸ்திரப்பயிற்சியை இலகுவாக்குவது மாத்திரமல்ல, மாணாக்கருக்குப் பிற்காலத்தில் அநுபோகப்பட்டதாயுமிருக்கும்.

# பரகிதம்.

---

பொன்னவனனையமுன்னோர் பொருந்திய நவக்கோளெண்ணைப்
பன்னியவடநூலாற்செய் பரகிதப்பனுவறன்னை
மன்னியதமிழினாலே மண்ணுளோரறியும்வண்ணம்
அன்னமென்னடையினாய்கேள் உரைசெய்வனழிவிலாமல். க.

என்பது. பிரகற்பதியை அனைய வித்துவான்களால் வடமொழியிற் செய்யப்பட்ட பரகிதத்தைத் தமிழினாலே அழியாதவண்ணஞ் செய்யுளாக உரைப்பனென்றவாறு.

யுகம் வருவிக்க.

அழிவிலாவிராசியீராறதனைவான்கலையதாக்கி
ஒழிவிலா எண்பான்முக்கக் கிரேதையோரறுபான்ஏற்ற
வழுவிலாத்திரேதைநாற்பான் வான்றுவாபரமதாகும்
கழிவிலா இருபான்முக்கக் கலியுகவருடமாமே. உ.

எ து. அழிவில்லா ஆதித்தியன் மயமாகிய இராசி, கஉ. வைத்துஒரு இராசிக்கு, க௲00. கலையாக எல்லாவற்றையுங் கலையாக்க, உகசு00. கலையாம். இஃதை, ௲0. ஆற்பெருக்க, களஉ௲000. இது கிரேதாயுகமாம். அஃதை சு0. ஆற்பெருக்க, கஉகசு000. இதுதிரேதாயுகமாம். அஃதை ச0. ஆற் பெருக்க ௲சுச000. இதுதுவாபரயுகமாம். அஃதை உ0. ஆற் பெருக்க, சஙஉ000. இது கலியுக வருடமாம். எ று.

சகாப்தம் பிறப்பிக்க.

வருமறுபானைச் சென்ற வட்டமெத்தனை யென்றத்தாற்
பெரிதுறப்பெருக்கிப் பின்னும் பிரபவ முதலாய்ச்சென்ற
தெரிவுறு வருடத்தோடு மணிமறை சுடர்கள் சேர்த்தாற்
பொருவறு கணிதர்யாரும் புகழ்சகன் வருடமாமே. ௩.

எ - து. அறுபதை வைத்து அப்போது சென்ற வட்டத்தாற்பெருக்கிப் பிரபவ முதலாய்ச் சென்ற வருடமும், ௯௪௯ ங் கூட்டச் சகனுக்குச்சென்ற வருடமாம். பிரபவாதி அறுபது சென்றால் ஒரு வட்டஞ் சென்றதென்று அறிந்து மேலுமப்படியே கூட்டிப் பெருக்குவது. எ - று.

விசேடவுரை.

*வட்டந் துடங்குமுன்பு சகராண்டு ௯௪௯. சென்றமையால், ௯௪௯. கூட்டுவது. இதனுற் கிறிஸ்தவருஷம் எஅ. இற் சகாப்தந் துடங்கியதென்று காண்க.*

பிரகற்பதிசக்கரம்.

*வருஞ்சகனாண்டிரண்டாய் வைத்துமேலறுபாற்கீந்தால்*
*இருந்தகீழ்ப்படிமுவேழொன்றேற்றிக் கண்கைகாலின்றேன்*
*பொருந்துமத்துள்ளேங்தேவர்க்கீந்துபோந்ததுமேற்கூட்டி*
*இருந்தபன்னிரண்டாற்றுக்கி முன்னதற்கீயமாதம்.* ௪.

எ - து. சகனுக்குச் சென்ற ஆண்டை இரண்டு படியாக வைத்து மேலிற் படியை அறுபதாலரித்து நின்ற சேடமறிந்துஅதிருக்க, கீழிற்படியை, ௨௨. ஆற் பெருக்கி அதினுடனே "கண்கைகாலின்றேன்" என்று கூட்டி "உள்ளேங்தேவர்" என்னுங் கருவியாலரித்துப் பெற்ற பலம் மேலிற்படியிலே கூட்டி ஈயாதிருந்த சேடம், ௧௨. ஆற் பெருக்கி முற்கருவியாலரித்துப் பெற்ற பலம் மாதமாம். எ - று.

*ஈயாது முப்பான்மாறி இதற்கீயத் தேதீபின்னும்*
*ஈயாததறுபான்றுக்கிமுன்னதற்கீயநாடி*
*ஒயாமேலிருபதாண்டும் உத்தமம் பின்னுவலந்தும்*
*ஓயாமத்திமம் பின்றீதாயிருபதும் விளங்குங் காலம்.* ௫.

எ - து. ஈயாத சேடத்தை முப்பதிற் பெருக்கி முற்கருவியாலரித்துப் பெற்ற பலம் தேதியாம். இன்னும் ஈயாத சேடம் அறுபதிற் பெருக்கி முற்கருவியாலரித்துப் பெற்ற பலம் நாழிகையாம். முன்புநின்ற மேற்படி ௨0. க்குள்ளாகில் உத்தமவிம்சதி என்றும், ௪0. க்குள்ளாகில் மத்திமவிம்சதி என்றும், ௬0. க்குள்ளாகில் அதமவிம்சதி என்றுமறிவது. இப்படி இருபதிருபதாகக் கழித்து மேனின்றதாண்டாகவும் கீழ் நின்றது மாதம் தேதி நாழிகையாகவும் கண்டுகோள்வது. எ - று.

விசேடவுரை.

க. ஆண்டென்று கண்டுக்கூறியது சௌர ஆண்டன்று, அஃது பி ரகற்பதி ஒரிராசியிலிருக்கும் மத்தியகாலப் பிரமாணமாம்.

உ. இவ்வாண்டு, கஅகூஎ சென்றற் சௌரஆண்டு, கஅஎரு. செ ல்லுமாதலின் அந்தரஆண்டாய உஉ. ஆற்பெருக்கி "உள்ளேங்தேவர்" என்றிவது.

௩. சகராண்டு தொடங்கியபோது நிகழாநின்ற பிரகற்பதிசக்கர த்தில், ஆண்டு ௩. மாதம் ௩. தினம் க௩. கழிந்ததாதலின், "கன் னைககாலீன்றேன்" என்று கூட்டுவது, ஆகவே இதனை "உள்ளேங் தேவர்" எனுங் கருவியாலரித்தபலம் முற்றறித்த ஆண்டு மாதந் திக தியாம்.

இனிச்சகாப்தம், கஎகூகூக்கு பிரகற்பதி ஆண்டாதிய கணிக்கும் வகை.

$$\frac{\text{கஎகூகூ}}{\text{௬0}} = \text{உ௬ வட்டமும் உகூ. வருடமுமாம்.}$$

$$\frac{\text{கஎகூகூ} \times \text{உஉ} + \text{சஉகூக}}{\text{கஅஎரு}} = \text{உ௩. வருடமும் க௬. தினமும் அ. நாழி}$$

கையுமாம். ஆகவேவருடம் ருஉ. என்றும் விம்சதி அதமவிம்சதி எ ன்றும் அறிக.

சூத்திரம்.

சேர்த்தியசகராண்டிற் கைசெய்தவில்லோனென்றே
ஏற்றிடக்கலியாண்டித்தில் நூலோன்றன்றூதனீசன்
சீர்த்ததுதாக்கிநேற்செய்வேலியீத்தது நாட்சேடம்
வேற்றறுபதின்றற்றாக்கி இதற்கீயவிளங்குநாடி. ௬.

எது. சகராண்டிலே "கைசெய்தவில்லோன" என் று கூட்டக் கலியுகத்திற்சென்றவாண்டாம்.

இஃதை "நூலோன்றன்றூதனீசன்" என்றதாற் பெரு க்கி "நேற்செய்வேலி" என்னுங் கருவியால் அரித்துப் பெற்றபலம் நாளாம்; சேடத்தை ௬0.ஆற் பெருக்கி முற்க ருவிக்கரித்தபலம் நாழிகையாம். எறு.

விசேடவுரை.

"நூலோன்றன்றூதனீசன்" என்று பெருக்கி "நேற்செய்வேலி" என்றிகவெனவே, வருடப்பிரமாணமாகிய ௩௬௫ தினமாதியவாற் பெருக்குகவென்பதாயிற்று. அல்லது௩அஎஎ. வருடத்தில் கசகக௬௫0௬. தினமேயாதலாற் கலியப்தத்தில் எத்தனை தினமென்று திரிராசிகமுறை ப்படி கணிக்கச்சொன்னாரென்றாலுமமையும். இச்சூத்திரத்துட்கூறி ய வருடப்பிரமாணமாவது. தினம் ௩௬௫. நாழிகை கரு. விநாழிகை உ௬. தற்பரை உ௬. ஐரோப்பைக்கணிதர் நிச்சயித்திருக்கின்ற வரு

டப்பிரமாணமாவது. தினம் ௩௬௫. நாழிகை ௧௫. விநாழிகை ௨௨. தற்பரை ௫௪.

### சுத்ததினங் காண வேறுமொரு விதம்.

கலியப்தத்தை வைத்துக் "கைதேடிப்போன்றந்தான்" என்ற வாக்கியத்தாற் பெருக்கிநின்றதிலே "செல்விபார்க்க" என்று கழிந்து நின்றதை "பூந்தேரு" என்று வைத்து ஈந்தபலத்தை மேலே தண்டாகாரமாகவைத்துக் கண்டது சுத்ததினமாம். பின்புநின்ற சேடத்திற் சுன்போட்டு ௬௰. ஆற் பெருக்கிமுற்கருவிக்கீந்துகண்டபலம் நாழிகையாம் பின்புநின்ற சேடத்திற் சுன்போட்டு ௬௰. ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து கண்டபலம் விநாழிகையாம். பின்புஞ் சேடமுண்டானுற் சுன்போட்டு ௬௰. ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்தபலந் தற்பரையாம். இது வருடாதிக்குத் தற்பரையாதிசுத்ததினமாம். தற்பரையை அர்த்தாதிகங்கொடுத்துத் தள்ளிமேனின்றதினத்தை ஏழிற்கழித்து நின்றசேடம் வெள்ளி வாராதிசங்கிரமத்துருவமாம். இதுதானே மேடசங்கிரமமாம். இந்தச் சங்கிரமத்துருவத்தை வைத்து இதிலே சங்கிரமவாக்கியங் கூட்டி அந்தந்த மாதச் சங்கிரமநாழிகை விநாழிகையறிவது. பகற்சங்கிரமமானால் அன்றுமுதற்றேதியாகவும், இராச் சங்கிரமமானால் மற்றைநாள் முதற்றேதியாகவும் எழுதுவது.

### விசேடவுரை.

*இச்சூத்திரத்தில் அடங்கிய வருடப்பிரமாணமாவது. தினம் ௩௬௫. நாடி ௧௫. விநாடி ௩௧. தற்பரை ௧௫. யுகாந்தசேஷமாகிய தினம் ௨. நாடி ௮. விநாடி ௫௧. தற்பரை ௧௫. கழியவேண்டியவதால் இங்ஙனஞ் "செல்விபார்க்க" என்றுகழிந்தது.*

### சங்கிரமத்துருவம்.

*நாடனையேழிற்றள்ள வெள்ளிமுன்னனுகும் வாரம்*
*ஓடியகடிகைதன்னில் ஒருபதின்மூன்றுகூட்ட*
*நாடியவிநாடியோடு நவிலுமுவிநாடியேற்ற*
*கூடியதுருவமாகுங் கொண்டசங்கிராந்திக்கெல்லாம்.* ௭.

௭ து. சுத்ததினத்தை ஏழிற்கழித்து நின்றதனைக் கலியுகம்பிறந்த சுக்கிரவாரம்முதலாக அற்றைக்கிழமையென்றறிவது. இதன்கீழ்நின்ற நாழிகையுடனே பதின்மூன்று நாழிகையும் அதன்கீழிருக்கிற விநாழிகையுடன் மூ

ன்று விநாழிகையுங் கூட்டிப்பார்க்க அவ்வாண்டுக்கு நாளும் நாழிகையும் விநாழிகையுங்கூடின சங்கிரமத்துருவமாம். எறு.

| சங்கிரமவாக்கியம். | மாதவாக்கியம் |
|---|---|
| சாதித்துலுக்கா, வைகாசி | பாரிலுண்டுபொழில், வைகாசி |
| நிணிர்தையலூர், ஆனி | ஈந்தீர்ஜயர்க்காமூர், ஆனி |
| ஆசானூர்குடான், ஆடி | பாழாமூர்முந்தின, ஆடி |
| நீர்விற்றீராரூர், ஆவணி | தீண்டிலீர்பார்த்துக்காண்க, ஆவ |
| நீணீர்ப்பூக்காணுய், புரட்டாதி | நீணீர்க்கூருமூர்முந்த, புரட்டாதி |
| கூருநீர்புகீர், ஐப்பசி | கூருநீமுன்னுரேக, ஐப்பசி |
| சிவனேநீடூர், கார்த்திகை | சிற்பரேநீடூர்வந்தார், கார்த்திகை |
| நெற்றிக்கேபட்டம், மார்கழி | பொன்னியைஇந்துவென்பார்,மார் |
| கோதிவனவிடாய், தை | எட்டினேன்கண்டுர்மீளார், தை |
| ஊரீர்பூக்கொள்ளீர், மாசி | பூணீருடோடுஞ்சோதி, மாசி |
| ஓதப்புகுதும், பங்குனி | ஓடமுந்துநீரினில், பங்குனி |
| வடிவுவட்டம், சித்திரை | வதியும்வண்டுபூவில், சித்திரை |
| இந்தவாக்கியங்களைச் சங்கிரமத்துருவத்தினுடனே கூட்டி அந்தந்த மாதப்பிறப்புக்காண்பது. | இந்த வாக்கியங்களை சங்கிரமத்துருவத்தினுடனே கூட்டிச் சித்திரையாதி அந்தந்த மாதப்பிறப்பளவுக்குஞ்சென்றநாளும்நாழிகையும் அறிவது. |

பஞ்சாங்க வாக்கியம் பிறப்பிக்க.

*விளங்குவாக்கியமேயெண்ண விகலையோர்முப்பத்தைந்தும்*
*வளங்கலைபத்தும் பாகைபன்மூன்றும்வைத்துமுன்னின்*
*உளங்கொள்வாக்கியந்தானென்றேல் ஒன்றேடுதாக்கிரண்டேல்*
*இளங்கொடியிரண்டாலேற்றுமற்றுமிவ்வகையாலேற்றே. அ.*

எ து. பஞ்சாங்கவாக்கியம் பிறப்பிக்கும்படி முப்பத்தைந்து விகலையும் பத்துக்கலையும் பதின்மூன்று பாகையும் வைத்து முதல்வாக்கியங் காணவேண்டின் ஒன்றாற் பெருக்குவது. இரண்டாம் வாக்கியங் காணவேண்டின் இரண்டாற் பெருக்குவது. மற்ற வாக்கியங்களும் இவ்வகையே பெருக்கியறிவது. முடிந்த வாக்கியங் காணவேண்டின் உசஅ. ஆற் பெருக்குவது. எறு.

*ஏற்றினதொகையைத்தீட்டி விகலையிரீருபதொன்று*
*முற்றியகலையோராறும்வைதது முன்போலத்தாக்கி*
*மாற்றிதுதன்வனமுன்னமெண்ணினதொகையில்வாங்கிக்*
*கோற்றவேல்விழியாய்சேடமேடாதிதுலாதிகொள்ளே. கூ.*

எ து. முன்பு பேருக்கினதொகையைத் தீட்டிவைத்துப் பின்பு சக. விகலையும், கூ. கலையும், வேறே வலப்

புறத்திலேவைத்து முன் சொன்னதுபோலே பெருக்கி அத்தொகையை முன்பு தீட்டின தொகையிலே கழிந்துநின்ற சேடத்திற்கு மேடாதி துலாதியறிவது. எறு.

விசேடவுரை.

கரு. பாகை, க0 கலை, ருரு. விகலை, இது சந்திரமத்திமபுத்தியாம். சு. கலை, சக. விகலை, இது துங்கமத்திமபுத்தியாம். இவ்விரண்டையும் அந்தரித்த சேஷம். கரு. பாகை, ரு. கலை, ருச. விகலை, இது சந்திரன் சாமண்டலமத்திமபுத்தியாம். இதனை விகலையாக்கி மண்டலப் பிரமாணமான விகலையை யரித்த பலம் சாமண்டல மாதமாம். அது சந்திரன் துங்கனைப் பிரிந்து கூடுங் காலவரையாம். சந்திரன் சாமண்டலமாதம் அறியும்படி; கஉகூசு000 விகலை / சஎ0ருச விகலை = உஎ. தினமும், ருரு. நாடியும், கசு. விநாடியும், கக. தற்பரையுமாம். இது உஎ. தினமும், ருரு. நாடியும், கசு. விநாடியும், ருரு. தற்பரையுமென்றிருக்கவேண்டும்.

கொண்டதிற் புசைநற்கோடி கழிந்துசாக்குறித்த சாவுந்
தண்டருமதியிற்கொண்டு சாசங்கரித்தபேற்றைப்
பண்டுமுன்றீட்டிவைத்த படியின்மேடாதிவாங்க
மண்டலந் திகழ்துலாதி கூட்டவாக்கியமதாமே ம.

எது. மேடாதி துலாதியறிந்துநின்ற தொகையிலே புசாகோடி கழிந்து சந்திரன்சாவிலே சாக்கொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் முன்புதீட்டிவைத்த படியிலே மேடாதி கழிந்து துலாதி கூட்டுவது. இப்படிக் கழிந்து கூட்டி நின்றது பஞ்சாங்க வாக்கியமென்று சொல்லுக. எறு.

மேடாதி துலாதியும் புசாகோடி கொள்ளும் வகையுஞ் சாக்கொள்ளும் விதமும் பின்பு கிரகப்புடத்திலே கண்டுகொள்க.

விசேடவுரை.

பஞ்சாங்கவாக்கியங்கள் துங்கனிலிருந்தெண்ணப்பட்ட சந்திரப் புடங்களாம். உசஅ. தினத்திற் சாமண்டலமாதம் ஒன்பதுமுடிய ச் சந்திரன் முன்புபோலத் துங்கனோடு பொருந்திநிற்கும். ஆனால் முற்றுமல்ல.

வாக்கியம் பிழைதீர.

வாக்கியத்தொகையைவைத்துப் பிழைத்ததின்றெகையைவாங்கி
நிக்கிநின்றதனால்வந்த வாக்கியமுடிவினோரே
போக்கிநின்றலகுதன்னைப் புகன்றிடத்தானினைந்த
வாக்கியம்பிழையாதென்றார்மன்னனில் வடித்தநூலோர். யக.

எ து. உசஅ. வைத்துப் பிழைதீர்க்கவேண்டிய வாக்கியத் தொகையைக் கழிந்துநின்ற சேடமெத்தனையென்றறிந்து அத்தனையாம் வாக்கியத்தை முடிந்தவாக்கியத்திற் கழிந்துநின்றது தானிழிந்த வாக்கியமேயாகும். இது தவறாது. எறு.

*வடித்தநூற்றிருபானுலாம் வாக்கியங்காணவேண்டின்*
*முடிந்தவாக்கியத்திற்பாதிமொழிந்தனர்முடிவுகாணிற்*
*றொடங்குவாக்கியத்தோடீற்றின்முன்னில்வாக்கியத்தைச்சூட்டத்*
*திடங்கொள்வாக்கியமிராசிமண்டலங்குறையிற்சேர்த்தே.* ௰௨.

எ து. கஉசு.ம் வாக்கியங் காணவேண்டின், முடிந்த வாக்கியத்திற் பாதியலகுகோள்வது. முடிந்த வாக்கியங்காணவேண்டின், முதல் வாக்கியத்தையும் உசஎ.ம் வாக்கியத்தையுங் கூட்டிக் காண்பது. குறைந்தவற்றுக்கெல்லாம் இராசிமண்டலங் கூட்டிக்கோள்க. எறு.

### அற்றைவாக்கியம்.

*எல்லையிறினத்தின்மன்னன்வீடுசூழ்குளமெடுத்துப்*
*பல்லியோனிக்கரித்தபலமுதலாகுஞ்சேடஞ்*
*செல்விகேளேறீர்மாவென்றரித்ததுவிருத்தஞ்சேடஞ்*
*சொல்லிடலற்றைநாட்குத்தோன்றும்வாக்கியமதாமே.* ௰௩.

எ து. சுத்ததினத்தைவைத்து இதிலே சென்றமாதமுந் தேதியுங்கூட்டிக் கிழமைகண்டு இதிலே "மன்னன் வீடுசூழ்குளம்" என்று கழிந்துநின்ற சேடத்தை "பல்லியோனி" என்றதற்கரித்துப் பெற்றபலம் முதற்பலமாம். நின்றசேடம் "ஏறீர்மா" என்றரித்துப் பெற்றபலம் விருத்தபலமாம். நின்றசேடம் அற்றைக்குச் சென்ற வாக்கியம். எறு.

### விசேடவுரை.

க. கலியுகாதிசென்ற சுத்ததினத்திலே "மன்னன்வீடுசூழ்குளம்" என்றுகளைகவெனவே, சுத்ததினத்தைச் சுருக்கும்படி சாமண்டலகுணகமாகிய இத்தனைதினத்தைக்கழிக்கச் சொன்னதென்றறிக. இத்தனைதினத்திற் சென்றவருடம் சஉஅகூ. ஆம்.

உ. "பல்லியோனி" என்றது, ககO. சாமண்டலமாதத்திலுள்ள தினமாம். இதற்கரிக்கவெனவே முன்னர்ச்சுருக்கிய தொகையை பின்னுஞ் சுருக்குவதற்கென்றறிக.

௩. "ஏறீர்மா" என்பது ஒன்பது சாமண்டலத்திலுள்ள தினமம். "பல்லியோனி" என்றதற்கரித்து நின்றசேடத்தை "ஏறீர்மா

என்றதற்கீந்தால் எத்தனைமுறை பஞ்சாங்கவாக்கியமுடிந்ததென்றும் அதிலெத்தனையாம் வாக்கியம் அற்றைவாக்கியமென்றும் அறியலாம்.

**சசித்துருவம்.**

*ஆமதலையாற்றுன்றுள்பெருக்கிப்பின்னீணீர்ச்செங்கால்*
*ஏமுறவிருத்தத்தேற்றியிதின்முதற்பலத்தைவாங்கிச்*
*சேமமாஞ்சேடந்தன்னிற்செய்யபோன்கொள்ளுமென்றே*
*வாமமேகலையாய்வாங்கவாக்கியத்துருவமாமே.* ௰௪.

எ து. முதற்பலத்தை "ஐயாற்றுன்றுள்" என்று சர்ப்பாகாரமாகவைத்துப் பெருக்கிப் பாகை கலை வரிசையாலேறிட்டு பின்பு விருத்தபலத்தை "நீணீர்ச்செங்கால்" என்று சர்ப்பாகாரமாக வைத்துப்பெருக்கி இதனையும் பாகை கலை வரிசையாலேறிட்டு இந்த விருத்தபலத்திலே முற்பட்ட முதற்பலத்தைக் களைந்து நின்றசேடத்திற் "செய்யபோன்கொள்ளும்" என்று களைந்துநின்றதுவாக்கியத்துருவமாம். எறு.

**விசேடவுரை.**

க. சசித்துருவமென்பது தற்காலப் பஞ்சாங்க வாக்கியந்தொடங்கிய அற்றைக்கு எண்ணிக்கண்ட சந்திரமத்திமப்புடமாம். அது அவ்வேளையிற்றுங்கன்புடத்திற்குச்சமமாம்.

உ. "ஐயாற்றுன்றுள்" என்பது "பல்லியோனி" என்றதினத்திற்குத் துங்கமத்திமகதியாகிய "மதியென்போன்மகன்" என்ற இராசி பாகை கலையை மண்டலத்திற்களைந்த சேடமாம்.

ங. "நீணீர்ச்செங்கால்" என்பது "ஏநீர்மா" என்றதினத்தில் துங்கன் சென்றபாகைகலையாம்.

ச. "செய்யபோன்கொள்ளும்" என்பது துங்கன் மூலத்துருவத்தை கஉ. இராசியிலெடுத்த சேடமாம். "மன்னன் வீடுசூழ் குளம்" என்ற தினந்தத்திலே துங்கனுக்கு மத்திமப் புடம். இராசி ௬. பாகை உ௬. கலை ச௬. இதனை பன்னிரண்டு இராசியிற் களையச் சேடம் இராசி ரு. கலை கஎ. இதுவே "செய்யபோன்கொள்ளும்" என்றது

ரு. நுதிவிழுதல். "தேடீர்வாள்" பலம், கஉ. ம் வாக்கியம் ருரு. ஞ் சென்றால் நுதிவிழுமென்றறிந்து ருரு.ம் வாக்கியம் வருகிறதினந்தத்திற்குமுன் சொன்ன கிரமத்திலே சசித்துருவங் கட்டிக்கொள்ளவும்.

**சசித்துருவங்காண வேறொரு விதம்.**

தினதிசுத்ததினத்திலே "சீரேவைத்தோன்றேல்லூரன்" என்றுவாங்கி நின்றதை "நாள்வெற்றிப்பாணம்"

என்றும் பின்பு "மதிசோதி" என்றும் பின்பு "தேடீர்வாள்" என்றும் வைத்தீந்துபெற்றபலங்கள்நாள்வெற்றிப்பாண :லமும் மதிசோதிபலமுந் தேடீர்வாள் பலமுமாம். சேடம் கதவாக்கியமாம். இதிருக்க, சர்ப்பாகாரமாகச் "சொல்லக்கேளீர் செய்யாளே" என்றுவைத்து நாள்வெற்றிப்பாண பலத்தினுற் பெருக்கிக் கீழ்ப்படி இரண்டும் விகலை, கலை ௬0. ஆலேறிட்டு அவற்றின் மேற்படிபாகை, ௩0.ஆலேறிட்டுஅதின்மேற்படி இராசிமண்டலங் களைந்து இதிருக்க, "கற்றேன்மதியென்போன்மகன்" என்றுவைத்து "மதிசோதி" பலத்தாற் பெருக்கி முன்போலேறிட்டு இதுவுமிருக்க, "தூயோன்சீர்சீரேம்மான்" என்று வைத்துத் தேடீர்வாள் பலத்தாற்பெருக்கி, முன்போலேறிட்டு மூன்றுதோகையும் ஒன்றுய்க்கூட்டி, இதிலே "சேம்போற்போதோமாலோன்பேண்" என்று கூட்டி ஏறிட்டுநின்றது விகலாதி சசித்துருவமாம். நடக்கிற சசித்துருவத்திலே "தூயோன்சீர்சீரேம்மான்" என்றுகூட்ட மேல்வருஞ் சசித்துருவமாம்.

தற்காலிக்க.

*துருவதற்காலமென்று தோன்றும்வாக்கியத்தின், முன்னுள்*
*மருவுவாக்கியத்தை வாங்கி வந்தநாழிகையாற் சேடம்*
*பெருகிடவிகலை முன்னும் பெற்றது வரிசைசெய்து*
*துருவமுன்களைந்த வாக்கியத்துடன் கூட்டச்சுத்தம்.* ௰௫.

எது. தற்காலம் எண்ணும்படி அற்றைவாக்கியத்தை வைத்து முன்னைநாளில் வாக்கியத்தைக் களைந்து நின்றசேடத்தைக் காணவேண்டுநாழிகையாற் பெருக்கிநின்றது விகலைமுன்னும்; அதனை வரிசையாலேறிட்டு அதிலேமுன்பு களைந்த வாக்கியத்தையுந் துருவத்தையுங் கூட்ட அது சுத்தப்புடமாம். இதில் நாட்பார்த்தால் அப்போதுகண்டநாழிகை அந்நாளிற்சென்ற நாழிகையாம். எ று.

நட்சத்திரம் எண்ணும்படி.

சசித்துருவத்தை வைத்து அதினுடன் அற்றைவாக்கியமும் மானியாதியுங் கூட்டச் சசிப்புடமாம். இதிலே படட்டநாளையெடுத்து நின்றதை ௬0. ஆற் பெருக்கிச் சந்திரபுத்திக்கீந்து பெற்றபலஞ் செல்லுநாளிற் சென்ற நா

ழிகையாம். இதை ௬0. இற் களைய அந்தநாள்முடியுநா டியாம்.

### திதி எண்ணும்படி.

சசிப்புடத்தைவைத்து அதிற்சென்ற மாதமுந் தேதியுங்களைந்து எண்ணுகின்றமாதம் பகற்சங்கிரமமானுற் சங்கிராந்திநாடி விநாடி கலை விகலையிற் கூட்டியும், இராச்சங்கிரமமானல், ௬0. இற் சேடங்களைந்தும், நின்றதிலே யோக்கியாதி வாக்கியம் மீளுதி ஏழுமாதமுங்கூட்டியுந்துலாதியைந்துங்களைந்தும்நின்றது திதிப்புடமாம். இதிலேடுபட்ட பக்கத்தையெடுத்து நின்றசேடத்தை ௬0. ஆற் பெருக்கிச் சந்திரபுத்தியிற் சூரியபுத்தியைக் கழித்துவந்த அந்தரபுத்திக்கு ஈயச் செல்லுந்திதியிற் சென்றநாழிகையாம். இதை ௬0. இற் களையச் செல்லுந்திதி முடியுநாடியாம்.

### யோகம் எண்ணும்படி.

சசிப்புடத்தை வைத்துத் திதிக்குக் கூட்டியவைகளைக் களைந்துங் களைந்தவைகளைக் கூட்டியும்நின்றது யோகப்புடமாம். இதிலேடுபட்டயோகம் எடுத்துநின்றசேடத்தை ௬0. ஆற் பெருக்கி அருக்க புத்தியுஞ் சந்திரபுத்தியுங்கூடின தோகைக்கீய நாழிகையாம். ஒழிந்தன முன்போற்காணவும்.

### கரணம் எண்ணும்படி.

ஒருதிதிக்கு இரண்டுகரணமாய்ப் பூருவபக்கப் பிர்தமைபிற்பாதிதோடுத்துக் கிரமமாய் முதலேழுகரணமும் எட்டுமுறை வந்தபிற்பாடு கடைநாலு ஸ்திரகரணமும் வந்துமுடியும்.

### விசேடவுரை.

*இதனல் முப்பது திதிக்குங் கூடியகரணம் ௬0. என்றும், ஒரு சாந்திரமாதத்தில்இந்த ௬0. கரணமுஞ் சென்றுவருமென்றும்அறியலாம்.*

---

### ஆதித்திய புடம்.

*சூத்தமாந்தினத்திற் சென்றமாதங்கள்தேதிகூட்டி*
*அத்தினமதனிற்சூழ்போந்தொந்தெற்கேகுளமகற்றி*

வைத்ததெல்லார்க்குங்கண்டம்மந்தன்முன்வாரங்கண்டு
மொய்த்திருபதினற்ருக்கிமுக்கோடிநெல்லென்றீயே. யசு.

எது. சுத்ததினத்தைவைத்து இதிற் சௌரமாதவகையாற் சென்றமாதமுந் தேதியுங்கூட்டி இதிலே "சூழ்போநந்தோங்தெற்கேகுளம்" என்றுகளைந்து நின்றசேடம் எல்லாக்கோட்களுக்குங் கண்டம்என்று சொல்லுவது. இதைத்தீட்டிச் சனிமுதலாகக் கிழமைகண்டுகொள்வது. ஆதித்தியனை எண்ணும்படி கண்டத்தைவைத்து இருபதாற்பெருக்கி "முக்கோடிநேல்" என்றீவது. எ-று.

விசேடவுரை.

க "சூழ்போங்தொங்தெற்கேகுளம்" என்பது கலியுகாதி, மூலத்துருவங்கட்டியநாள்வரைக்குஞ் சென்றதினமாம். இதனைவருடமாக்க,சா௬சச. வருடமும் ௬உச. தினமுமாம். ஆகவே மூலத்துருவங்கட்டியது கலியுகவருடம் சா௬சச. சென்றுசெல்லாநின்ற குரோதிவருடம் மாசி மாதம் என்றறிவது. இந்தத்தொகையான தினத்தைக் களைவது சுத்ததினத்தைச் சுருக்கிக் கணிதம் எளிதில்முடிக்கும்படி.

உ. உ0. வருடத்தில் எ௬0ரு. தினமாமாதலில் உ0. ஆற் பெருக்கி "முக்கோடிநெல்" என்றீவது. இதில் ஒருவருடப்பிரமாணம் ௬சுரு. தினமும் கரு. நாடியுமாகக்கொள்ளப்பட்டது.

ஈபலமண்டலாத்தம்இருந்ததீராறிற்ருக்கி
ஈயமுற்கருவிக்கீந்தவப்பலமிராசிசேடந்
தோயுமுப்பானிற்ருக்கிச்சொன்னதற்கீயப்பாகை
கூயதையறுபாற்ருக்கிஇதற்கீயக்கலையாங்கோதாய். யஎ.

எது. முன்பு "முக்கோடிநேல்" என்றதற்கீந்த பலத்தின்பெயர் மண்டலாத்தமாம். இதைத் தீட்டிவைத்து நின்றசேடத்தை கஉ. ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்த பலம் இராசியாகவைத்து நின்றசேடத்தை ௬0. ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்த பலம் பாகையாகவைத்து நின்றசேடம் சு0. ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம்கலையாகவைத்து அர்த்தாதிகம் வருகிற்கலையோன்று கூட்டுவது. எ-று.

கோதின்மண்டலாத்தந்தாக்கிக்கோற்றுடிவேதநூலிற்
போதறுகலைமுன்னீக்கிப்பொய்தீர்மிக்கபோதங்கூட்டச்
சோதிமத்திமம்பாகாதிவேதவான்களைசூழ்சேடம்
ஆதியாறிராசிக்குள்ளுமேடாதிதுலாதியப்பால். யஅ.

எது. மண்டலாத்தத்தைக் "கோற்றுடி" என்றுபெருக்கி"வேதநூல்" என்றரித்துப் பெற்றபலம் கலையாம். இதை எண்ணியிருந்தகலையிலேகளைந்து "பொய்தீர்மிக்க

போதம்'' என்ற மூலத்துருவங்கூட்ட ஆதித்தன் மத்திம மாம். இந்த மத்திமத்திலே பாகாதியாக "வேதவான்" என்று மங்தோச்சங்களைந்து நின்றசேடம் ஆறிராசிக்குள் ளாகில் மேடாதியென்றும் ஆறுக்கப்பால் துலாதியென்று ம் அறிவது. எறு.

விசேடவுரை.

*பதினொரும்பாட்டின்படி பெருக்கி ஈந்தால் ஒருவருடத்துக்கு உகூ. வி நாடியும் உகூ. தற்பரையுங் குறையும். அதனால் ஒவ்வொருமண்டல த்திற்கும் உகூ. விகலையாக கூகஅ. மண்டலாத்தத்திலே ௬௦0. க லைவிலகும். ஆதலால் மண்டலாத்தத்தை "கோற்றேடி" என்று பெருக்கி "வேதநூல்" என்று களைந்து கலைகாண்பது.*

*பாற்புசைகோடியென்றுபதுந்தோரைமும்மூன்றேட்டிப்*
*போற்புசையதனிற்சாக்கொள்கோடியேற்புசையதாக்கிச்*
*சேர்த்தவைமுக்காற்பாகைக்கொருசாவாய்க்களைந்தசேடம்*
*பேர்க்கலையாக்கிப்பெற்றசாமேல்வைபின்சாக்கீழ்சேர்.* யகூ.

எது. மேடாதி துலாதி தீட்டிநின்றதை வைத்து இதி லே புசைஎன்று மூன்றிராசியுங் கோடிஎன்று மூன்றிரா சியுமாகக்களைந்துபுசையென்று களைந்தபின்கோடியேடுப டாதிருந்தாற் புசையென்று மூன்றிராசிவேறேவைத்து நி ன்றகோடியைக் களைந்து நின்றசேடத்தை மூன்றேமுக் காற்பாகைக்கோரு சாவாகக்கோண்டு சேடத்தைக் கலை யாக்கிப் பெற்றசாவைக் கலைக்குமேலாகவைத்து அதன் பின்னிற் சாக் கலைக்குக்கீழாகவைப்பது. எறு.

*பின்சாவின்முன்சாநீக்கிப்பெற்றதாலிடையைத்தாக்கிக்*
*குன்றுதார்க்கீந்தபேறுகூட்டுமேற்சாவின்மேற்சாப்*
*பின்சாவிற்களையஇல்லேற்பெற்றசாமாறிவைத்து*
*முன்போலவீந்தபேற்றைமொய்குழல்களைமேற்சாவில்.* உ௰.

எது. கீழ்ச்சாவிலே மேற்சாவைக் களைந்து நின்றசே டத்தால் நடுநின்றகலையைப் பெருக்கிக் "குன்றுதார்" எ ன்னுங் கருவியாலரித்துப் பெற்றபலம் மேற்சாவிலே கூட்டுவது. கீழ்ச்சாவிலே மேற்சாக்களையப் போதா தாகிற் கீழ்ச்சாவை மேலேவைத்து மேற்சாவைக் கீழே வைத்து முன்போலே பெருக்கிஅரித்துப் பெற்றபலம் மேற்சாவிலே களைவது. எறு.

விசேடவுரை.

*மூன்றேமுக்காற் பாகைக்கு ஒருசாவாமாதலின் அதனைக்கலையா க்க, உஉரு. கலையாம் அதுவே "குன்றுதார்" என்பது. உஉரு கலைக்*

குப்பின்சாவிலே முன்சாவைக்கழிந்த அந்தரகலையேயானால் நடுநின்றகலைக்கெத்தனையெனத்திரிராசிகமுறைப்படி கணிக்கவேண்டியமையாற் "பின்சாவின் முன்சாநீக்கிப் பெற்றதாலிடையைத்தாக்கிக் குன்றுதார்க்கீந்தபேறுகூட்டு மேற்சாவில்" என்று கூறியது.

சாக்கொளப்போதாதாகின்முதற்சாவாற்கலையைத்தாக்கி
ஈக்கமுன்போலவீந்தபலங்கலையாமென்றெண்ணி
மாக்கலைவரிசைசெய்துமத்திமமதனிற்கூட்டத்
தூக்கியதுலாதிமேடங்களாந்திடஅருக் கன்றூய்தாம். உ௧.

எது. சாக்கோள்ளப்போதாதாகில் முதற்சாவிலே நடுநின்றகலையைப்பெருக்கி முன்புபோலரித்து மேலேவைக்க அதுகலையாம். அக்கலையை வரிசையாலேறிட்டு ஆதித்தன் மத்திமத்திலே துலாதியாகிற் கூட்டி, மேடாதியாகில் களைய ஆதித்தனுக்குச் சுத்தப்புடமாம். எறு.

### சந்திர புடம்.

தூய்கண்டம் அறுநூறேற்றிஇறைவிதூரம்போநீக்கி
ஆயும்பன்னிரண்டுமுப்பதறுபதாற்பெருக்கிமுன்னீங்
தேய்கின்றவிராசிபாகைகலைகொண்மண்டலாத்தமெட்டால்
ஈவந்தபலமுன்னீக்கொண்சோதிமாயவனென்றேற்றே உஉ.

எது. சந்திரனை எண்ணும்படி கண்டத்தைவைத்துஅறுநூற்றுப்பெருக்கி "இறைவிதூரம்" என்னுங்கருவியால் அரித்துப் பெற்றபலம் விருதாப்பலமாம். நின்றசேடத்தை ௧உ. ஆலும், ௩0. ஆலும், ௬0. ஆலும், பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி, பாகை, கலைகளாம். முன்புதீட்டின மண்டலாத்தத்தை எட்டால் அரித்துப் பெற்றபலம் கலையாம். இத்தைக் கலையிலே களைந்து "ஒண்சோதிமாயவன்"என்றமூலத்துருவங் கூட்டச் சந்திரன் மத்திமமாம்.

### விசேடவுரை.

௬00. சந்திரமண்டலத்தில் ௧௬௩௬௩. தினமாமாதலில் ௬00. ஆற்பெருக்கி "இறைவிதூரம்" என்றரிப்பது. ஒருசந்திரமண்டலப் பிரமாணம் தினம் உஎ. நாடி ௧௬. விநாடி ௧அ. ஆகக்கொள்ளப்பட்டது. இப்படிச் சந்திரமண்டலப் பிரமாணங்கொளின் எட்டு வருடத்துக்கொரு கலைசந்திரன் விலகிநிற்பானாதலின் மண்டலாத்தத்தை எட்டுக்கீந்து கலை தள்ளுவது.

ஏற்றமத்திமமாந்திங்கட்கினித்துங்கனேணக்கண்டத்தை
மாற்றிலாவிண்ணோர்க்கீந்துவரும்பலம்போகச்சேடம்
ஆற்றுமீராறுமுப்பான்அறுபானாற்பெருக்கிமுன்னிற்
சேர்த்ததற்கீந்தராசி பாகையுங்கலையுஞ்செய்யே. உ௩.

எது. துங்கனையெண்ணும்படி கண்டத்தை வைத்து "மாற்றிலா விண்ணோர்" என்னுங் கருவியாலரித்துப் பெற்றபலம் விருதாப்பலமாம். நின்றசேடத்தை கஉ. ஆலும், ௬0. ஆலும், ௬0. ஆலும் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலைகளாம். எ-று.

விசேடவுரை.

*துங்கன்மண்டலதினம் ௬உ௬உ. ஆதலின் "மாற்றிலாவிண்ணோர்" என்றரிப்பது.*

*செய்யமண்டலாத்தமுன்னைமணமென்றுபெருக்கொண்பத்திக்*
*கெய்தியபலமுன்னீக்கிஎன்போலும்பொன்னிகூட்டத்*
*துய்யமத்திமமாம்இத்தைச்சோமன்மத்திமத்தில்வாங்கி*
*மையில்சாமுன்போற்செய்துமறிநீக்கமதியெண்ணும்.* உச.

எது. மண்டலாத்தத்தை "முன்னைமணம்" என்று பெருக்கி "ஒண்பத்தி" என்னுங் கருவியாலரித்துப் பெற்றபலம் கலையாம். இதை வரிசைசெய்து நின்றதை முன்னெண்ணிநின்றதிலே களைந்து "என்போலும்பொன்னி" என்றமூலத்துருவங் கூட்டத் துங்கன்மத்திமமாம். இதைச் சந்திரன் மத்திமத்திலேகளைந்து நின்றதை மேடாதி துலாதியறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம் பண்ணிச் சாபலமுழுதுஞ் சந்திரன்மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்டச் சந்திரன் சுத்தப்புடமாம். எ-று.

விசேடவுரை.

*முந்தினபாட்டின்படி கணித்தால் ௬௧0. வருடத்திலே துங்கன் ககக௬. கலவிலதுமாதலின் "முன்னைமணம்" என்று மண்டலாத்தத்தைப் பெருக்கி "ஒண்பத்தி" என்றீந்தகலையைத்தள்ளுவது.*

செவ்வாய் புடம்.

*எண்செவ்வாய்தனக்குக்கண்டம்எண்ணேழ்பூவரித்துப்போக்கி*
*மண்டியீராறுமுப்பதறுபதான்மாறிமுன்னீ*
*கண்டதுராசிபாகைகலைகொண்மண்டலாத்தம்பூநீர்*
*கொண்டுடன்பெருக்கிப்பொய்யிலார்க்கீந்தபலமுன்கூட்டே.* உரு.

எது. செவ்வாயை எண்ணும்படி கண்டத்தை வைத்து "எண்ணேழ்பூ" என்னுங் கருவியாலரித்துப் பெற்றபலம் விருதாப்பலமாம். நின்றசேடத்தை கஉ. ஆலும், ௬0. ஆலும், ௬0. ஆலும் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலைகளாம். முன்சொன்ன மண்டலாத்தத்தை "பூநீர்" என்றுபெருக்கிப் "பொய்யி

லார்'' என்னுங் கருவியாலரித்துப் பெற்றபலம் கலையாம். இதைமுன்பு எண்ணிநின்ற கலையிலே கூட்டுவது. எ-று.

விசேடவுரை.

செவ்வாய் மண்டலதினம் கூஅஎ. ஆதலின் "எண்ணேழ்பூ" என்றரிப்பது. இப்படியரித்தால் உகூ0. வருடத்திற்செவ்வாய் சகூ. கலைவிலகுமாதலின் மண்டலாத்தத்தை "பூநீர்" என்று பெருக்கிப் "பொய்யிலார்" என்றீந்தகலை கூட்டுவது.

*கூட்டிப்பின்கன்னிதேரோன்பகனீக்கஇடைகுசற்குத்*
*தீட்டிதிற்பாகையாதிதேராணிகளந்தசேடம்*
*ஆட்டொடுதுலாதியாய்ந்துசாபலம்பாதியாக்கி*
*வாட்டுமத்திமத்தின்மேடந்துலைகூட்டுமந்தஞ்சேய்க்கே.* உகூ.

எ-து. முன்புநின்ற தொகையிலே "கன்னிதேரோன்பகல்" என்றமூலத்துருவங்களையச்செவ்வாய்மத்திமமாம். இதைத் தீட்டிவைத்து இதிலே பாகையாதியாக "தேராணி" என்ற மந்தோச்சங்களைந்து நின்றதில் மேடாதி துலாதியறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலம் பாதிசெய்து செவ்வாய்மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்ட மந்தார்த்தமாம். எ-று.

*மந்தத்தையருக்கனூர்தம்மத்திமமதனில்வாங்கி*
*அந்தமில்மகரமாதியாறுமந்தாதிச்சாவாம்*
*வந்தகர்க்கடகமாதியாறுமத்திமச்சாவாகுஞ்*
*சிந்தித்துச்சாக்கொள்கொண்டுசாபலம்பாதிசெய்யே.* உஎ.

எ-து. மந்தார்த்தத்தை ஆதித்தன்மத்திமத்திலே களைந்து நின்றசேடம் மேடாதி துலாதியறிந்து, மகராதிஆறும் ஆதியந்த பாதிச்சாவென்றுங் கர்க்கடகாதிஆறும் மத்திமபாதிச்சாவென்றும்அறிவது. இப்படிச்சாவறிந்துபுசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத்தை அர்த்திப்பது. எ-று.

*செய்யுமேடாதிமந்தவரையினிற்சேர்க்கச்செவ்வே*
*வெய்யசீக்கிரார்த்தம்ஈதில்வேராணிகளமந்தோச்சந்*
*தையல்கேள்மேடமாய்ந்துசாக்கோள்சாபலத்தைமுற்றும்*
*பொய்யில்சேய்மத்திமத்திற்றுலைகூட்டப்புடமதாமே.* உஅ.

எ-து. முன்புஅர்த்தித்து நின்றசாபலத்தை மந்தார்த்தத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் சீக்கிரார்த்தமாம். சீக்கிரார்த்தத்திலே "வேராணி" என்று மந்தோச்சமெடுத்

று நின்றசேடத்தை மேடாதி துலாதியறிந்து புசாகோடி கொண்டு சாவெடுத்துச் சாசங்காரம்பண்ணிச் சாபலமுழு துஞ் செவ்வாய்மத்திமத்திலே மேடாதி களைந்து துலாதி கூட்டப் புடமத்திமமாம். எறு.

*புடர்தனையருக்கனுர்தம்மத்திமமதனிற்போக்கி*
*அடைந்தகோன்மேடநண்டுமகராதியறிந்துசாவாய்ந்*
*திடந்தருபுசையேகோடிகொண்டுசாபலத்தையெல்லாம்*
*புடந்தனின்மேடங்கூட்டித்துலநீக்கப்பூமன்சுத்தம்.* உகூ.

எது. புடமத்திமத்தை ஆதித்தன்மத்திமத்திலே களைந்து நின்றதை மேடாதி துலாதிமகராதி கர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் புடமத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் செவ்வாய்க்குப் புடமாம். எறு.

புதன் புடம்.

*பூகண்டநூறிற்ருக்கிப்புதனுக்குவெள்ளைச்சேந்தேன்*
*ஈகண்டதீராறையாறிருமுப்பான் பெருக்கிமுன்னீந்*
*தாகின்றவிராசிபாகைகலையாக்கிப்பேசீர்நீண்டோன்*
*போகங்கொண்மண்டலாத்தம்பெருக்கரிபோலிகாலென்றே.* ௩௰.

எது. புதனையெண்ணும்படி கண்டத்தைவைத்து நூறுற்பெருக்கி "வெள்ளைச்சேந்தேன்" என்றகருவியால் அரித்துப் பெற்றபலம் விருதாப்பலமாம். நின்றசேடத்தை கஉ. ஆலும், ௩0. ஆலும், ௬0. ஆலும் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலைகளாம். முன்சொன்ன மண்டலாத்தத்தைப் "பேசீர்நீண்டோன்" என்றுபெருக்கிப் "போலிகால்" என்றரித்துப் பெற்றபலம் கலையாம். எறு.

விசேடவுரை.

புதனுடைய நூறுமண்டலத்தில் அஎகூஎ. தினமாமாதலின்நூருற் பெருக்கி "வெள்ளைச்சேந்தேன்" என்றீவது. இப்படிப்பெருக்கியீந் தால், உ௩0. வருடத்திற் புதன் சசஅ. கலைவிலகுமாதலின் மண்டலாத்தத்தை "பேசீர்நீண்டோன்" என்று பெருக்கி "போலிகால்" என்றரித்தபலங்கூட்டுவது.

*என்றதிற்பலமுன்கூட்டியொருசெங்கோல்வெய்யோனென்றே*
*அன்றதிற்களையப்புந்திமத்திமமதனில்வெய்யோன்*
*சென்றமத்திமத்தைநீக்கிச்சேடங்கோன்மேடந்தேர்ந்து*
*நின்றது மகரமாதிகடகாதியறிசநேரே.* ௩க

எது. முன்புகண்டபலம் கலையாம். இதைவரிசை செய்து முன்பு எண்ணிநின்றதிலே கூட்டி "ஒருசெங் கோல்வெய்யோன்" என்றமூலத்துருவங் களையப் புதனு க்கு மத்திமமாம். இதைத்தீட்டிவைத்து இதிலேஆதி த்தன் மத்திமத்தைக்களைந்து நின்றதை மேடாதிதுலாதி மகராதி கர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்கா ரம்பண்ணுவது. எ-று.

*நேர்ந்தசாபலத்திற்பாதிநீள்கதிர்மத்திமத்திற்*
*சேர்ந்தமேடாதிகூட்டச்சீக்கிரவரையாம் இத்தில்*
*ஆர்ந்தவேழிராசிநீக்கி அறிகோறிதுலாதிசாக்கொள்*
*கூர்ந்தசாபலத்தைவெய்யோனடுவுடன்றுலாதிகூட்டே.* ௩௨.

எது. சாபலத்தை அர்த்தித்து ஆதித்தன்மத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் சீக்கிரார்த்தமாம். இதி ல்இவனுடைய மந்தோச்சமான ஏழிராசிகளைந்து நின்ற தை மேடாதிதுலாதியறிந்து புசாகோடி முன்போலேகோ ண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் ஆதித்தன் ம த்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்டப் புடமத்தி மமாம். எ-று.

*கூட்டிடப்புடமாம் இத்தைக்குலப்புதனடுவினீக்கி*
*ஆட்டுடன்றுலாதிநண்டுமகராதி அறிந்துசாவாய்ந்*
*தோட்டியபுசையேகோடியொழித்துச்சாசங்கரித்துப்*
*பூட்டியபலம்புடத்திற்றுலநீக்கப்புதற்குத்தூய்தாம்.* ௩௩.

எது. புடமத்திமத்தை இவன்மத்திமத்திலே களைந்து நின்றதை மேடாதி துலாதி மகராதி கர்க்கியாதியறிந்து பு சாகோடிகொண்டு சாவறிந்து சாசங்காரம்பண்ணிச் சாப லமுழுதும் புடமத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதிக ளையப் புதன்சுத்தப்புடமாம். எ-று.

குரு புடம்.

*தூயகண்டத்தோர்சுன்வைத்ததைவிச்சாதிரிசீர்க்கீந்து*
*போயதீராறுமுப்பதறுபதாற்பெருக்கிமுன்போல்*
*ஈபலமிராசியாதி இருத்திமண்டலாத்தங்கீணிர்*
*ஆயதாற்பெருக்கிப்பொய்யிலார்க்கரித்ததுமுனிக்கே.* ௩௪.

எது. வியாழனை எண்ணும்படி கண்டத்தை வைத்து அதிலொரு சுன்கொடுத்து "விச்சாதிரிசீர்" என்றரித்துப் போக்கிநின்றசேடத்தை ௧௨. ஆலும், ௩0. ஆலும், ௬0. ஆலும் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசிபா கை கலைகளாம். முன்சொன்ன மண்டலாத்தத்தை

"கீணிர்" என்றுபெருக்கிப் "போய்யிலார்" என்றரித்து ப் பெற்றபலம் கலையாம்; இதைக்களைவது. எறு.

விசேடவுரை.

*குருவினது, கO. மண்டலத்தில் சஙஙஉங. தினமாமாதலிற் கண்டத் திற்குச் சுன்கொடுத்து "விச்சாதிரிசீர்" என்றரிப்பது. இப்படிப்பெ ருக்கி அரித்தாற் குரு உஙO. வருடத்திலே சச. கலை விலகி நிற்குமாத லாற் "கீணீர்" என்றுபெருக்கிப் "பொய்யிலார்" என்றீந்தபலங்க ளவது.*

*நீக்கித்திற்குடிசூழ்பொன்னேயெனக்கவளந்திட்டசேடங்*
*கோக்குருநடுவாம் அத்திலாரேரைகவளந்துகோலா*
*டாக்கினதறிந்துசாக்கொள் அன்னதிற்பாதிதன்வன*
*மாக்குருமத்திமத்திற்றுலைகூட்டமந்தமாதே.* ஙரு.

எது. முன்புநின்றதிலே "குடிசூழ்பொன்னே" என்ற மூலவாக்கியங்களைய வியாழன்மத்திமமாம். இதைத்தீ ட்டிவைத்து இதிலே இவன்மந்தோச்சமான சு. இராசி களைந்து நின்றதை மேடாதி துலாதி அறிந்து புசாகோடி கோண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத்தை அர்த்தித்து இவன்மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்ட மந் தார்த்தமாம். எறு.

*மாதராய்மந்தந்தன்வன அருக்கன்மத்திமத்தில்வாங்கி*
*ஆதிமேடாதிகோலென்றறிந்துபின்னடுவந்தாதி*
*நீதிசாவறிந்துசாக்கொள் சாபலம்பகுந்துநேரே*
*தீதிலாப்பலமதாடேற்கூட்டச்சீக்கிரமதாமே.* ஙசு.

எது. மந்தார்த்தத்தை ஆதித்தன் மத்திமத்திலே களை ந்து நின்றதை மேடாதி துலாதி மகராதி கர்க்கியாதி அறிந் து புசாகோடிகோண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத் தை அர்த்தித்து மந்தார்த்தத்திலே மேடாதி கூட்டித் து லாதிகளையச் சீக்கிரார்த்தமாம். எறு.

*சீக்கிரத்திராசி ஆறுகளைசேடமேடங்கோறேர்*
*சாக்கொள் சாபலத்தைமுற்றுந் தடங்குருமத்திமத்திற்*
*போக்கிமேடாதிகூட்டத் துலாதியேற்புடமதாகும்*
*ஆக்கியபுடத்தைநீக்குஅருக்கன்மத்திமத்தில்ஆங்கே* ஙஎ.

எது. சீக்கிரார்த்தத்திலே இவன்மந்தோச்சமான சு. இ ராசிகளைந்து நின்றதை மேடாதிதுலாதிஅறிந்து புசாகோடி கோண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் இவன் ம த்திமத்திலே மேடாதி களைந்து துலாதி கூட்டப் புடமத் திமமாம். இதை ஆதித்தன் மத்திமத்திலே களைவது. எறு.

*ஆங்கதிற்சேடமேடந்துலாதி ஆய்ந்தந்தாதிச்சாத்*
*தீங்கறுமத்திமச்சாப்புசாகோடிதெளியக்கொண்டு*
*தாங்குசாசங்கரித்துச் சாபலமுழுதுங்கோலேல்*
*வாங்கிமேடாதிகூட்ட வான்குருச் சுத்தமாமே.* ௩௮.

எது. முன்புநின்ற சேடத்தை மேடாதி துலாதி மகராதி கர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் புடமத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதி களைய வியாழத்துக்குச் சுத்தப்புடமாம். எ-று.

சுக்கிரன் புடம.

*சுத்தவெண்புகர்க்குக்கண்டந்தூயவைந்நூற்றிற்குக்கி*
*வைத்தர்கருவிமைதீர்ராகவன்வாய்ந்தசேட*
*மொய்த்ததீராறுமுப்பதறுபதாற்பெருக்கிமுன்னீந்*
*தெய்த்தநுண்ணிடையாய் ஒரைமுதற்பாகைகலையிருத்தே.* ௩௯.

எது. சுக்கிரனை எண்ணும்படி கண்டத்தைவைத்து ஐந்நூற்றிற்பெருக்கி "மைதீர்ராகவன்" என்றரித்துப்பெற்ற பலம்போக நின்றதை க௨.ஆலும் ௩0.ஆலும் ௬0. ஆலும் பெருக்கி முற்கருவிக்கரித்துப் பெற்றபலம் இராசி பாகை கலையாம். எ-று.

விசேடவுரை.

*சுக்கிரன் மண்டலம் ௫00. க்கு கக௨௩௪௯. தினமாமாதலில் ஐந்நூற்றுற் பெருக்கி "மைதீர்ராகவன்" என்றீவது.*

*இருந்தமண்டலாத்தமேற்றிமேற்குலம்பொலிகாற்கீந்து*
*வரும்பலமுன்கவளந்துவைப்போம்வையோன்ருள்வாங்கப்*
*பொரும்புகர்நடுவாமித்திற்பொலிசுடர்நடுவைநீக்கி*
*அருந்துலைமேடமாதிமகரநண்டாதி ஆய்ந்தே.* ௪௰.

எது. மண்டலாத்தத்தை "மேற்குலம்" என்று பெருக்கிப் "போலிகால்" என்றரித்துப் பெற்றபலத்தை முன்பு எண்ணிநின்ற கலையிலே களைந்து "வைப்போம்வையோன்ருள்" என்ற மூலத்துருவங்களையச் சுக்கிரனுக்கு மத்திமமாம். இதிலே ஆதித்தன் மத்திமத்தைக் களைந்து நின்றதை மேடாதி துலாதி மகராதிகர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணுவது. எ-று.

விசேடவுரை.

*௩௯. ம் பாட்டின்படி பெருக்கி ஈந்தாற் சுக்கிரன் ௨௩0. வருடத்தில் கரு௮. கலை விலகுமாதலில் "மேற்குலம்" என்று பெருக்கிப் "பொலிகால்" என்றரித்த பலங்களைவது.*

ஆய்ந்ததுபகுந்தாடாதி அருக்கன்மத்திமத்திற்கூட்டிப்
பூந்துலையாதிபோக்கச்சீக்கிரம் அதிற்பொற்கோயில்
வாய்ந்தமந்தோச்சம்வாங்கிமறிதுலை அறிந்துசாக்கொள்
போந்தசாபலந்துலாதிபொலிசுடர்நடுவுபூட்டே. சக.

எது. சாபலத்தை அர்த்தித்து ஆதித்தன் மத்திமத்திலே மேடாதி கூட்டித் துலாதிகளையச் சீக்கிரார்த்தமாம். இதிலே இவனுடைய மந்தோச்சம் "பொற்கோயில்" பாகாதிகளைந்து நின்றதை மேடாதி துலாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் ஆதித்தன் மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்டப் புடமத்திமமாம். எ று.

பூட்டிடப்புடமாம்இத்தைப்புகர்நடுவதனில்வாங்கி
ஆட்டுடன்றுலாதி ஆய்ந்துநடுவும் அந்தாதிச்சாவுங்
காட்டினதறிந்துசாக்கொள்கருதுசாபலம்புடத்திற்
சூட்டுமேடாதியாகிற்றுலைகளைபுகரோன்சுத்தம். சஉ.

எது. புடமத்திமத்தைச் சுக்கிரன் மத்திமத்திலேகளைந்துநின்றதை மேடாதி துலாதி மகராதி கர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் புடமத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் சுக்கிரனுக்குச் சுத்தப்புடமாம். எ று.

### சனி புடம்.

புகல்சனிகண்டமூதூர்நெற்றேட்டத்தீந்துபோக்கித்
தீகழுமீராறுமுப்பதறுபதாற்பெருக்கிச்சேர்ந்த
வகையேமுன்னதற்கீந்தோரைமுதல்வைத்துமண்டலாத்தம்
பகர்தருவையந்தாக்கிப்பொலிகாற்கீபலமுன்பாச்சே. சஙு.

எது. சனியை எண்ணும்படி கண்டத்தை வைத்து "மூதூர் நெற்றேட்டம்" என்றரித்துப்போக்கி நின்றதை கஉ.ஆலும், ௩0.ஆலும், ௬0ஆ.லும், பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலைகளாம். முன்சொன்ன மண்டலாத்தத்தை "வையம்" என்று பெருக்கிப் "பொலிகால்" என்றதற்கீந்து பெற்றபலம் முன்பு நின்ற கலையிலே கூட்டுவது. எ று.

### விசேடவுரை.

சனியினது ஒருமண்டலத்தில் க0,எ௬௬. தினமாமாதலில் "மூதூர்நெற்றேட்டம்" என்றீவது. இப்படியீந்தால் உ௬0. வருடத்திலே சனி க௬. கலை விலகுமாதலில் "வையம்" என்றுபெருக்கி "பொலிகால்" என்றரித்தபலங் கூட்டுவது.

*பாச்சித்தில்ஐமுகன்பொன்மெய்யெனப்பறித்தசேடம்*
*பூச்சனிநடுவாம் இத்திற்பூசாநெய்களைந்துகோலா*
*டாச்செறிவறிந்துசாக்கொண்டதிற்பாதிகோன்மேடாதி*
*சாச்சனிநடுவினீக்கித்துலைகூட்டச்சனிக்குமந்தம். சச.*

எது. முன்பு நின்றதிலே "ஐமுகன் பொன் மெய்" என்ற மூலத்துருவங்களையச் சனிக்குமத்திமமாம். இதைத்தீட்டி இதிலே "பூசாநெய்" என்றதைப் பாகாதியாகக் களைந்து நின்றதை மேடாதி துலாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத்தை அர்த்தித்து இவன் மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்ட மந்தார்த்தமாம் எ று.

*சனிமந்தந்தன்னைவெய்யோன்றன்னடுவதனிற்றள்ளி*
*இனியமேடாதிநண்டுமறிசுறவறிந்துசாக்கொண்*
*டனையதிற்பாதிமேடமாதிமந்தத்திற்கூட்டச்*
*சினவியகோவலவேற்கண்ணாய்சீக்கிரவரையாஞ்செவ்வே. சரு.*

எது. மந்தார்த்தத்தை ஆதித்தன்மத்திமத்திலே களைந்து நின்றதை மேடாதிதுலாதி மகராதிகர்க்கியாதி அறிந்துபுசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத்தை அர்த்தித்து மந்தார்த்தத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் சீக்கிரார்த்தமாம். எ று.

*செவ்வியசீக்கிரத்திற்கூடாப்பெண்களைந்தசேடந்*
*தவ்வமீல்மறிகோறேர்ந்துசாக்கொள்சாபலத்தைமுற்றும்*
*வெவ்வியசனியின்மத்திமத்தின்மேடாதிநீக்கக்*
*கவ்வையில்புடமாம்இத்தைக்கதிர்நடுவதனில்வாங்கே. சசு.*

எது. சீக்கிரார்த்தத்திலே "கூடாப்பெண்" என்று பாகாதிகளைந்து நின்றதை மேடாதிதுலாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் இவன் மத்திமத்திலே மேடாதிகளைந்து துலாதிகூட்டப் புடமத்திமமாம். இதை ஆதித்தன் மத்திமத்திலே களைவது. எ று.

*வாங்கிமேடாதிகோன்முன்மகராதிகடகமாதி*
*ஆங்கவை அறிந்துசாக்கொண்டறையுமேடாதியாகிற்*
*பூங்குழன்மடவாய்கூட்டித்துலாதியேற்புடத்திற்போக்கத்*
*தீங்கிலாச்சனியின்சுத்தப்புடமெனச்செப்பலாமே. சஎ.*

எது. வாங்கி நின்றதை மேடாதிதுலாதிமகராதி கர்க்கியாதி அறிந்து புசாகோடிகொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலமுழுதும் புடமத்திமத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளையச் சனிக்குச் சுத்தப்புடமாம். எ று.

பாடு உதயம்.

செப்பியசெவ்வாய்பன்னேழ்சிர்மதிபுந்திபன்மூன்
றெப்பிலாவியாழம்பன்றென்றென்பதுபாகம்வெள்ளி
தப்பின்மூவைந்துபாகஞ் சனிகதிர்முன்பின்சாரில்
அப்பொழுதிறப்புமந்தப்பிறப்புமாம் ஆங்கவர்க்கே. சஅ.

எது. ஆதித்தனுக்கு கஎ. பாகை அளவிற் செவ்வாய் பாடு உதயமென்றும், சந்திரன் புதன் கங. பாகையளவிற் பாடு உதயமென்றும், வியாழன் கக. பாகையளவிற் பாடு உதயமென்றுஞ், சுக்கிரன் கூ. பாகையளவிற் பாடு உதயமென்றுஞ், சனி, கரு. பாகையளவிற் பாடு உதயமென்றும் அறியப்படும். எ று.

சுக்கிரன் பாடு உதயம்

ஆங்கண்டமதனிற்கூட்டிச்செங்தெருவரிநீர்மேடு
பாங்கொக்கவரித்தால் அன்றுபடுவதுகிழக்கேவெள்ளி
பூங்கண்டம்புதுவாள்கூட்டிப்பொருந்துமுன்போலவீந்தால்
வீங்கிளமுலையாய் ஒக்கவீந்தநாள்மேற்குப்பாடே. சகூ.

எது. சுக்கிரன்பாடு அறியும்படி கண்டத்தைவைத்து இதிலே "செங்தெரு" என்று கூட்டி நின்றதோகையை "நீர்மேடு" என்றரித்தால் ஒக்க வீந்துதாகில் அன்றுகிழக்கே பாடு. கண்டத்திலே "புதுவாள்" என்று கூட்டி "நீர்மேடு" என்று அரித்தால் ஒக்க வீந்துதாகில் அன்று மேற்கே பாடாம். எறு.

விசேடவுரை.

கண்டந்தொடங்க, ருஎஎ. தினத்திற்கு முன்னே சுக்கிரன்வக்கிராத்தமனமாயும், உருரு. தினத்திற்கு முன்னே சுபாவாத்தமனமாயும் இருந்ததாதலாற் "செங்தெரு" என்றும் "புதுவாள்" என்றுங்கூட்டுவது. "நீர்மேடு" என்பது சுக்கிரன் ஆதித்தனைப் பிரிந்து கூடுங்காலவரையாம்.

பாடுமேற்றலையேற்பட்ட பத்தாநாட் கிழக்கேதோன்றும்
பாடுகீழ்த்திசையேற்பட்ட பதிற்றேழின் மேற்கேதோன்றும்
பாடுமேற்றலையேற்பார்த்தவெண்ணுக்குமுன்னேயாகிற்
பாடதாற்கிழக்கேமூன்று நாளைக்குமுன்னேபாடாம். ருய.

எது. மேற்றலை வக்கிராத்தமனமாகில் அத்தமித்த பத்தாநாட்கிழக்கே வக்கிரோதயமாம். கீழ்த்தலை அத்தமனமாகில் எழுபதாநாள் மேற்கே உதிக்கும். மேற்றலை அத்தமனமாகில் எண்ணிப் பாடுகண்டநாளைக்கு மூன்றுநாள்முன்னே படும். ஆதித்தனுடைய கிரணத்தினுலே மூ

டப்பட்டபடியாற் கிரகங்கள் பாடென்று பெயராயிற்று. எ று.

இராகு புடம்.

முன்னிய கண்டந்தன்னை முல்லைவெண்பூவென்றீந்து
பன்னிரு முப்பானறுபதாற்ருக்கி ஈதைமுன்னீந்
தன்னதை இராசிபாகைகலையாக்கி மண்டலாத்தந்
தன்னைமின் கோண்டலென்று பெருக்கியீ போலிகாறன்ருல் ருக.

எது. இராகுவை எண்ணும்படி கண்டத்தை வைத்து "முல்லைவெண்பூ" என்றரித்துப் பெற்றபலம் போகநின்றதை கஉ.ஆலும், ௩0.ஆலும், ௬0.ஆலும், பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலைகளாம். மண்டலாத்தத்தை "மின்கோண்டல்" என்று பெருக்கிப் "போலிகால்" என்னுங் கருவியாலீவது. எ று.

விசேடவுரை.

இராகுவுக்கு, ௬எகூரு. மண்டலதினமாமாதலில் "முல்லைவெண்பூ" என்று கண்டத்தை அரிப்பது.

தன்பலமதனிற்கூட்டித்தையலாய் எண்சீர்வெண்பா
முன்புறும் அதனிற்கூட்ட மொய்யரா நடுவாம் இத்தை
இன்பமண்டலத்தினீக்கவிராகுவின் சுத்தம் இத்தில்
வன்றிறலிராசியாறு கூட்டிடக்கேதுமாதோ. ருஉ.

எது. முன்பரித்துப்பெற்ற பலங் கலையாம். இத்தை வரிசைசெய்து முன்பெண்ணிநின்றதிலே கூட்டி "எண்சீர்வெண்பா" என்று மூலத்துருவங்கூட்ட இராகு மத்திமமாம். இதை இராசிமண்டலத்திற் களைய இராகுவுக்குச் சுத்தப்புடமாம். இதில் ௬. இராசிகூட்டக் கேதுசுத்தப்புடமாம். எ று.

விசேடவுரை.

முன்கூறியவகையாய்க் கண்டத்தை அரித்தால், உ௩0.வருடத்துக்கு, க0௩. கலை விலகுமாதலால் "மீன்கொண்டல்" என்று பெருக்கி "போலிகால்" என்றீந்தபலங் கூட்டுவது.

மத்திமம் எண்ணும்படி

எண்ணிக்கண்ட சுத்ததினத்தை வைத்து, இதிலே "கான்பட்ட திண்டேர்ச்சூதன்," என்று களைந்து நின்றது செவ்வாய் வாராதிகண்டமாம். கண்டத்தைவைத்து அவரவர் குணகாரத்திலுலே பெருக்கி அவரவர் ஆரகத்துக்கு அரித்தபலம்விருதாப்பலமாம். சேடத்தை கஉ.ஆலு

ம். ளூ0.ஆலும். கூ0.ஆலும், பெருக்கி முற்கருவிக்கரித்த பலத்தை இராசி பாகை கலையாகவைத்து, பின்பு கண்டத்தை வைத்து அவரவர் பகன்வாக்கியத்துக்கீந்து பெற்ற பலங் கலையாம். இதை ஏறிடவுண்டானல் ஏறிட்டுமுன்வைத்தபடியிலே செவ்வாய் புதன் சனி இராகு இவர்களுக்குக் கூட்டவும். ஆதித்தன் துங்கன் சந்திரன் வியாழன் வெள்ளி இவர்களுக்குக் கழியவும். இப்படிச்செய்து நின்றதிலே அவரவர் மூலத்துருவங்கூட்ட அன்று சூரியோதயவரைக்கும் மத்திமமாம்.

மத்திமப்புட வாக்கியம்.

| | குண காரம். | ஆரகம். | பகனம். | மூலத்துருவம். |
|---|---|---|---|---|
| சூரியனுக்த | ளூக | சிந்தாதிப்படம் | ஊறுதோபோதம் | |
| சந்திரனுக்கு | கூ00 | விடையிற்கூத்தன் | போவாரைப்பார் | செந்தரைநல்லூர் |
| துங்கனுக்கு | க | ஆனியாடி | வேளூர்ப்பெண் | எற்றேன்மேலாமயன் |
| செவ்வாய்க்கு | க | வெள்ளேறூர்ந்தோன் | ஊரூரேகப்போம் | நீதிவிண்டனம் |
| புதனுக்கு | க00 | வெள்ளைச்செந்தேன் | தலைவன் [யம் | கஸடோமுன்றுளோடம் |
| வியாழனுக்கு | க0 | இ [illegible] றுளிச்சித்திரி | கோண்டீர்வை | வீசீர்மேலாகும் |
| சுக்கிரனுக்கு | ரு00 | மைதீர்ராகவன் | இட்டீர்முன் | செந்தற்கூர்கொங்கூர் |
| சனிக்கு | க | ஊர்சூழ்நெற்றேட்டம் | ஊறுமுன்சீர் | ஏற்றுடன்போர்தீர் |
| இராகுவுக்கு | க | முல்லைவெண்பூ | சிவன்றேர் | பெண்ணுய்வந்தான்மால் |

விசேடவுரை.

*சுத்ததினத்திலே 'காண்பட்ட தீண்டேர்ச்சுதன்'' என்று கவளந்து கண்டமறிந்ததனுல் கிறீஸ்த ௵ கரு0எ. இலே கண்டந் தொடங்கியதென்று காணலாம்.*

கிரக புடம்.

*இம்முறை விக்கிரமாதித்த இராசனினது சபையிலிருந்த நவரத்தின புலவரில் ஒருவராகிய வரருசியினுல் முன்னர் வடமொழியிற் செய்யப்பட்டும் பின்னர் செகராசசேகரன் என்ற அரசனினது அனுமதிப்படி இற்றைக்குமுன் ௬௪0 வருடமளவிலே தமிழாய் மொழிபெயர்க்கப்பட்டுமிருக்கின்றது.*

க. செவ்வாய் முதல் ஐந்துகிரகத்துக்கும் புடமெண்ணும்படி நாழிகையாதியாக இட்டசுத்ததினம்வைத்து இதிலே அவரவருடைய சோத்தியவாக்கியத்தில்எடுக்கப்போந்த வாக்கியங்கொண்டெடுத்து எடுத்தவாக்கியத்தின் அந்தத்தில் மும்மூன்றெழுத்துத் துருவாக்கரம் என்று மேலே வைப்பது.

உ. பின்பு தனத்தைத் தனத்தோடேயும் இருணத்தை இருணத்தோடேயுங் கூட்டித்தனத்துருவம் மேல்வைத்து இருணத்துருவங்கீழ்வைத்துப் பெரியதிற்சிறியதுகளைந்து நின்றகலையை அறுபதாலேறிடவுண்டானுல் ஏறிட்டுக்கலை மிகுந்தாற் பாகையாக்கி நின்றது அந்தந்தக்கிரகங்களுக்குத் துருவமாம்.

௩. நின்றசேடத்தைப் பரிவிருத்தி வாக்கியத்துக்கீந்து பெற்றபலம் கேதபரிவிருத்தியாம். நின்றது வருடாதி சேடமாம்.

ச. இதில் எடுக்கப்போந்த இலக்கத்தை எடுத்து நின்றது தினசேடமாம். இலக்கம் எடுத்த வாக்கியத்தைஇடதுபுறத்திலே வைத்து அதற்குப்பிந்தின வாக்கியத்தை வலதுபுறத்திலே வைத்து இந்த வாக்கியங்களிலே சுத்தம்பண்ண வேண்டுமெழுத்துச் செவ்வாய்க்கிரண்டு, புதன் சனி வியாழன் இந்த மூன்றுகிரகத்துக்கும் ஒவ்வொரு எழுத்து, வெள்ளிக்கிரண்டேழுத்து இந்த எழுத்துக்களைக் கொண்டு அவரவர் துருவத்தைப் பெருக்கிக் கீழ்ப்படி அறுபதாலேறிட்டு அர்த்தாதிகங்கொடுத்து வாங்கிப்போட்டு நின்றதை அறுபதாலேறிடவுண்டானுல் ஏறிட்டு நின்றபா

கை கலையை அந்த வாக்கியத்திலே தனமுந் தனமுமாகிலு
ம் இருணமும் இருணமுமாகிலுங் கூட்டி, ஒன்று தன
ம் ஒன்றிருணமானாற் களையச் சுத்தவாக்கியங்களாம்.

ரு. புதன், வியாழன், சனி இந்தமூன்றுகிரகத்துக்கும்
ஒவ்வோரெழுத்தாகையினாலே ஒவ்வோரு எழுத்துக்கொ
ண்டு துருவத்தைப் பெருக்கிச் செவ்வாய்க்குப்போலே
வாக்கியங்களைச் சுத்தம்பண்ணிக்கொள்க. வெள்ளிக்
கிரண்டெழுத்தாகையினாலே தனத்துருவமானால் முன்
னெழுத்துக்கொண்டும், இருணத்துருவமானாற் பின்னெ
ழுத்துக்கொண்டுஞ் சுத்தம்பண்ணுவது.

சூ. எல்லாக்கிரகத்துக்கும் முன்வாக்கியம் பூருவம்,
பின்வாக்கியம் அபரம். அபரவாக்கியத்திலே பூருவவா
க்கியத்தைக் களைந்து நின்றபாகையைக் கலையாக்கி மீ
ளவுஞ் சுன்போட்டு, சூ. ஆல் பெருக்கி விகலையாக்கி இ
லக்காந்தரத்துக்கீந்து பெற்றபலம் புத்தியாம்.

எ. இந்தப் புத்தியைக்கொண்டு தினசேடத்தைப்பெ
ருக்கி இருபடியும் அறுபதால் ஏறிட்டு அர்த்தாதிகங்கொடு
த்து வாங்கிப்போட்டு நின்றகலையைப் பூருவவாக்கியத்
திலேகூட்டித் துருவமுந் தனமாகிற்கூட்டி இருண்மாகிற்
களைந்து நின்றது அந்தந்தக் கிரகங்களுக்குச் சுத்தப்புட
மாம்.

### வக்கிர புடம்.

அ. இந்த ஐந்து கிரகத்துக்கும் வக்கிரமானகாலத்திலே
பூருவவாக்கியம் பெருத்து அபரவாக்கியஞ் சிறுத்திருக்கு
ம். பூருவவாக்கியத்தை இருபடிவைத்து ஒருபடியிலே
அவரவர் அபரவாக்கியத்தைக்களைந்து நின்றபாகையைக்
கலையாக்கி மீளவுஞ் சுன்போட்டு, சூ.ஆல் பெருக்கி இல
க்காந்தரத்துக்கீந்து பெற்றபலம் புத்தியாம்.

கூ. இந்தப் புத்தியைக்கொண்டு தினசேடத்தைப்பெரு
க்கி இருபடியும்அறுபதாலேறிட்டு அர்த்தாதிகங்கொடுத்து
நின்றகலையைப் பூருவவாக்கியத்திலேகளைந்து துருவமுந்
தனமாகிற்கூட்டி இருணமாகிற் களைந்து நின்றது வக்கிர
புடமாம்.

### பெயர்ச்சி எண்ணும்படி.

ய. இந்தக் கிரகங்கள் எந்தஇராசியிலே நிற்கின்றனவே

ன்றறிந்து அந்தஇராசியிற் பிரமாணத்தைமேலேவைத்து அந்தக்கிரகங்களுடைய துருவத்தை இருணத்துருவமானால் இராசியின்கீழே பாகைகலையாகவைத்துத் தனத்துருவமானால் அந்த இராசியிலே கழித்து நின்றது இட்டமாம். இட்டத்தைச் சர்ப்பாகாரமாய்வைத்து இதற்குக் குறைந்தவாக்கியத்தை இட்டத்தின்கீழே வைத்து இதற்குப் பின்வாக்கியத்தை வலது புறத்திலே வைத்து வாக்கியங்களை வாக்கிய சுத்தமாக்கி நின்றது முதல் வாக்கியம்பெருத்தால் வக்கிரசாரமென்றும் பின் வாக்கியம் பெருத்தாற் சுபாவசாரமென்றும் அறிக. சுபாவசாரஞ் சுத்தம்பண்ணியிருந்தால் பின் வாக்கியத்திலே முன் வாக்கியத்தைக் கழித்து நின்றபாகத்தைக் கலையாக்கி மீளவுஞ் சுன்போட்டு ஆறுற் பெருக்கி இலக்காந்தரத்துக்கீந்து பெற்றபலம் புத்தியாம்.

யக. இந்தப் புத்திக்குமேலே இட்டத்தை வைத்து முன் வாக்கியமாகச் சுத்தம்பண்ணி இந்த வாக்கியத்தை இட்டத்திலேகழித்து நின்ற பாகையைக்கலையாக்கி மீளவுஞ் சுன்போட்டு விகலையாக்கி முன்வைத்த புத்திக்கீந்தபலந் தினமாம். நின்றசேடத்தை அறுபதாற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் நாழிகையாம்.

யஉ. இதிலே முன் வாக்கியத்து இலக்கத்தையுங் கூட்டி வருடத்திற்பின்பு பரிவிருத்திசென்றுற் கேதபரிவிருத்தியிலே எல்லா வாக்கியத்திலும் பின் வாக்கியத்து இலக்கத்தையுங் கூட்டி வருடாதி சேடங்கழித்து மாதவாக்கியமுங் கழியவுண்டானுற் கழித்து இன்னமாதம் இத்தனையாந்தேதி இத்தனையா நாழிகையிலே பெயருமென்றறிக.

### அநுவக்கிரம் எண்ணும்படி.

யங. இட்டத்தைச் சர்ப்பாகாரமாக வைத்து இதிலே ஒரு இராசிகழித்து நின்றது அநுவக்கிர இட்டமாம். வக்கிரமுதல் நிமிர்ச்சியளவும் பார்த்தால் இட்டத்துக்குக் குறைந்தவாக்கியமுண்டானுல் அநுவக்கிரமுண்டு.

யச. இட்டத்துக்கேறின வாக்கியத்தைக் கீழேவைத்துக் குறைந்த வாக்கியத்தை வேறேவைத்து இரண்டுவாக்கியமுஞ் சுத்தம்பண்ணிப் பெரியவாக்கியத்தை இருப

டிகட்டிச் சிறியவாக்கியங் களைந்து நின்றபாகத்தைக் க லையாக்கி மீளவும் விகலையாக்கி இலக்காந்தரத்துக்கீந்து பெற்றபலம் புத்தியாம்.

யரு. இந்தப் புத்தியை வைத்துக்கொண்டு பெரியவா க்கியத்திலே இட்டதைக்களைந்து நின்றபாகையைக் க லையாக்கிக் கீழ்க்கூட்டி மீளவும் விகலையாக்கி முன்வை த்த புத்திக்கீந்து பெற்றபலந் தினமாம். நின்ற சேடம் அறுபதாற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் நாழி கையாம். இதிலே பெருத்தவாக்கியத்து இலக்கத்தையு ங்கூட்டி வருடாதிசேடமும் மாதவாக்கியமுங்களைந்து இ ன்னமாதம் இத்தனையாந் தேதி இத்தனை நாழிகையிலே அநுவக்கிரமென்றறிக.

யசா. செவ்வாய்க்கு எஉரு.ம் வாக்கியத்தில் அத்தமன ம், ருரு.ல் உதயம், ஙஉக.ல் வக்கிரம், சஉகூ.ல் நிமிர்ச்சி.

யஎ. புதனுக்கு க00.ல் அத்தமனம், கஎ.ல் உதயம், சகூ.ல் வக்கிரம், ருக.ல் வக்கிராத்தமனம், சாரு.ல் வக்கி ரோதயம், எ0.ல் நிமிர்ச்சி.

யஅ. வியாழனுக்கு ஙஅரு.ல் பாடு, கச.ல் உதயம், கஙகூ.ல் வக்கிரம், உருகூ.ல் நிமிர்ச்சி.

யகூ. சுக்கிரனுக்கு ருசகூ.ல் அத்தமனம், ஙரு.ல் உதய ம்,உசாஎ.ல் வக்கிரம்,உஅஎ.ல் வக்கிராத்தமனம்,உகூஎ.ல் வக்கிரோதயம், ஙகச.ல் நிமிர்ச்சி.

உய. சனிக்கு ஙசாக.ல் அத்தமனம், கஎ.ல் உதயம், க உ0.ல் வக்கிரம், ஙசா0.ல் நிமிர்ச்சி.

உக. இவைகளெண்ணும்படி அந்தந்த இலக்கங்களை வைத்து வருடத்திற்பின் பரிவிருத்திசென்றுற் கேதபரி விருத்தியிலே எல்லாவாக்கியத்திலும் ஈற்றில்வாக்கியத்து இலக்கத்தையுங் கூட்டி வருடாதிசேடங்களைந்து மாத வாக்கியமுங் களைய உண்டானுற் களைந்து அந்தந்தக் கி ரகம் அந்தந்த முறையாய் இன்னமாதம் இத்தனையா ந் தேதி இத்தனைநாழிகையிலே இருக்குமென்றறிவது.

உஉ. ஆதிவாக்கியமுற்றுல் எண்ணும்படி, மந்தோச்ச த்தைப் பூருவவாக்கியமாக வைத்துப் படிகட்டிப் புட ப்பெயர்ச்சி எல்லாம் எண்ணிக்கொள்க.

### மந்தோச்சமாவது.

உங. செவ்வாய்க்கு "ஒதோம் மேலாகில்," புதனுக்கு

"போனேமோ சொல்லேன்," வியாழனுக்கு "போரே மோ சொல்லூர்," வெள்ளிக்கு "போமோ பொன்னே ளி," சனிக்கு "போவோங் கூடாரேன்ரே."

துருவப் பெயர்ச்சி.

உச. நாடியாதியான சுத்ததினத்திலே நாடியாதியாக வருடப் பிரமாணங் கூட்டி இதில் எடுக்கப்போதாத சோத்தியவாக்கியங்கள் எடுக்கப்போதுகிலும், எடுத்தவாக்கியம் பின்னேயும் ஒருக்கால் எடுபடினும்அந்தவாக்கியத்தை எடுத்துத் துருவத்தைக்கட்டிநின்ற சேடத்தை நாடியாதியான வருடப்பிரமாணத்திலே கழிந்து இருபடிசெய்து ஒரு படியிலே மாதவாக்கியங் கழிந்து இன்னமாதம் இத்தனையாந் தேதி இத்தனை நாழிகையிலே துருவப்பெயர்ச்சி என்றறிக. மற்றப்படி கேதசேடமென்றறிவது துருவப் பெயர்ச்சி எண்ணும்பொழுது துருவப்பெயர்ச்சிக்கு முன்னே சொன்னபடியே பெயர்ச்சியிடுவது. துருவப் பெயர்ச்சிக்குப் பின் வருடாதிசேடங் கழியாமற் கேதசேடத்தைக்கூட்டி மாதவாக்கியங் கழிந்து பெயர்ச்சியிடுவது. இட்டமும் வேருக்கிக் கோள்க.

இராகு புடம் எண்ண வகை.

உரு. தினமுதலான சுத்ததினத்திலே "மூன்றார்போமோ சொல்லூர்" என்கிற வாக்கியங் கழிந்து நின்றது ஊனதினமாம். இதை இருபடிவைத்து ஒருபடியை "மாறை என்னூர்" என்கிற புத்திக்கீந்து பேற்றபலம் விருதாப்பலமாம் ஈயாது நின்றசேடத்தின்கீழே "கூத்தூரும்" என்கிற வாக்கியத்தைவைத்து ஈந்துபெற்றபலம் இராசியாம். நின்றசேடத்தை முப்பதிற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் பாகையாம். நின்றசேடத்தை அறுபதிற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலங் கலையாம். அர்த்தாதிகமுண்டாகிற் கொடுத்துவாங்கிப்போட்டு நின்ற இராசி பாகை கலையை வைத்து முன்புநின்ற ஊனதினத்தின் கீழே "கூற்றினையுண்டோன்" என்கிறவாக்கியத்தை வைத்தீந்து பெற்றபல முன்னிருந்த இராசி பாகை கலையிலே கழிந்து நின்றதைப் பன்னிரண்டிராசிவைத்துக் கழிந்து நின்றது இராகுவுக்குச் சுத்தப்புடமாம். இதிலே ஆறிராசி கூட்டக் கேதுவுக்குச் சுத்தப்புடமாம்.

## விசேடவுரை.

''மாறையென்னூர்'' என்பது இராகுவின் மண்டலதினமாம். இ ஃதை "முல்லைவெண்பூ'' என்று முற்கூறியிருக்கிறது. "கூத்தூரும்'' என்பது இராகு ஓரிராசியில் நடக்குங் காலமாகிய தினமாம். முற்குறித்த வகையிற் கணிதஞ்செய்தால், ருகூகூகூ. தினத்தில் இராகு ஒருகலை விலகுமாதலால் ஊனதினத்தை "கூற்றினையுண்டோன்'' என்னுங் கருவியாலரித்தபலங் கவளவது.

## இராகுவுக்குச் சாரம் எண்ண வகை.

உகூ. வருடாதிக்குப் புடமெண்ணி இன்ன இராசியிலே நிற்கிறுனென்றறிந்து மேனின்ற இராசியை எடுத்துப்போட்டுக் கீழேநின்ற பாகையைக் கலையாக்கி மீளவும் விகலையாக்கி இத்தை "வலையன்'' என்கிற வாக்கியத்துக்கீந்து பெற்றபலம் நாளாம். ஈயாது நின்ற சேடம் அறுபதாற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் நாழிகையாம். இதிலே மாதவாக்கியங் களைய உண்டானுற் களைந்து நின்றதனுல் இன்னமாதம் இத்தனையாந் தேதி இத்தனை நாழிகையிலே பெயருமென்றறிவது.

## விசேடவுரை.

ககூக. கலைக்கு இராகுசெல்ல, கூ0. நாட்செல்லுமாதலாற் "கீழேநின்ற பாகை கலையை'' விகலையாக்கி "வலையன்'' என்னுங் கருவியாலரிப்பது.

# கிரகணம்.

## சயந்தமாலை.

*மாமதிகதிரோன்றன்னை வாளராவளைக்கும் வண்ணம்*
*தாமரை அயனேயன்ஞன் சாற்றிய சயந்தமாலை*
*ஆமது தமிழிஞல்யான் அறைகுவதானையீட்டம்*
*போம்வழி எறும்புபோக நினைக்கும்புன் மதியைப்போலாம்* க.

எது. முன்னையோராற் செய்யப்பட்ட சயந்தமாலையென்னும் வடமொழியதனைத் தமிழிஞல் யான்சொல்வது இப்பரிசு, எ று. மாமதி என்பது பூரணசந்திரன்.

*மதிகதிர் துங்கன்பாம்பின் மத்திமமுவைநாட்கெண்ணி*
*உதயமுன்னுவாச்சென்றடி அறிந்தொரு நாழிகைக்கு*
*மதிகலையொருபன் மூன்றும் மன்னிய விகலைபத்தும்*
*கதிர்கலை ஒன்றுமாகக் கடிகையுள்ளளவும் ஏற்றே* உ.

எது. இராகுகேதுநின்ற இராசியிலாதல், அதற்குமுன்பின் இராசியிலாதல் சந்திராதித்தர் வந்து பகலே அமாவாசியாதல் இராத்திரிப் பூரணையாதல் அற்றுதேயாகில் அன்று கிரகணசங்கையென்றறிந்து முன்னை நாளுக்குச் சந்திராதித்தர்மத்திமத்தையுந் துங்கன் மத்திமத்தையும் இராகு மத்திமத்தையும் எண்ணித்தீட்டிக் கிரகணம்பிடிக்கிற அன்று உதயாதி சித்தாந்தப்படி உவாநாழிகை இன்னதென்றறிந்து உவாநாழிகையொன்றுக்குச் சந்திரனுக்குக் கலை பதின்மூன்றும் விகலைபத்தும் இரவிக்கு ஒருகலையும் துங்கனுக்கு ஆறேமுக்கால் விகலையும் இராகுவுக்கு மூன்றுவிகலையுமாக உவாநாழிகை உள்ளளவும் ஏற்றுவது. எ று.

*ஏற்றிய தொகைகடம்மை இவர்கண்மத்திமத்திற் கூட்டச்*
*சாற்றியதற்காலத்து மத்திமமாகுமத்திற்*
*றேற்றிய சுத்தமெண்ணிச் சுடர்மதி தற்காலத்து*
*மாற்றிலாவேதவானுந் துங்கனுங்களை மந்தோச்சம்* ௩.

எது. முன்பேற்றிநின்ற கலை விகலைகள் இவர்கள் மத்திமத்திலே கூட்ட உவாவறுதி நாழிகைக்குத் தற்கால மத்திமமாம். இதைத் தற்காலமத்திமமென்று தீட்டி இவற்றைக்கொண்டு தற்கால சுத்தப்புடமெண்ணி இந்தச் சுத்தப்புடங்களைத் தற்கால சுத்தப்புடமென்று தீட்டி வைத்துத் தற்கால ஆதித்தன் மத்திமத்திலே பாகாதியாக

"வேதவான" என்றும் சந்திரன் தற்கால மத்திமத்திலே துங்கதற்கால மத்திமத்தையுங்களைய நின்றது கேந்திர மேன்று பெயராம். இக்கேந்திரங்களை இரவிகேந்திரமே ன்றுஞ் சசிகேந்திரமேன்றுந் தீட்டி வைப்பது. எ று.

விசேடவுரை.

ஆதித்தனின் மந்தோச்சகதி ருகஎ. வருடத்துக்கொரு கலையென்பது இந்திய சோதிசாஸ்திரிகளின் கருத்தாய் இருப்பதால் ஆதித்தமந்தோச்சத்தை அக்கர ராசிகமாய்க் கூறியிருப்பது.

களைந்தபின் மகரங்கர்க்கி அறிந்துகோடியிற் சாக்கொண்டு
விளைந்த சாபலமதாய விகலையை வரிசைசெய்து
வளங்கலை அன்பத்தேழிற் கூட்டிடுமகரமாதி
களைந்திடு கர்க்கியாதி கதிர்மதி தனக்குக் கன்னம். ச.

ஏது. முன்வந்த கேந்திரத்திலே நாலாம் இராசி தொடங்கி ஒன்பதாம் இராசி அறுதியாகக் கர்க்கியாதியென்றும் பத்தாம் இராசிதொடங்கி மூன்றும் இராசி அறுதியாக மகராதியென்றும் அறிந்து புசாகோடிகொண்டு கோடியிலே சாக்கோள்வது. சாக்கோள்ளப்போதாதாகில் முதற்சாவாலே நடுநின்ற கலையைப் பெருக்கி முன்புபோலே "குன்றுதான்" என்னுங் கருவியால் அரித்துப்பெற்றபலம் மேற்சாவிலே கூட்டுவது. சாக்கோள்ளும்படி ஆதித்தனுக்கு ஆதித்தன் சாவிலுஞ் சந்திரனுக்குச் சந்திரன்சாவிலுங்கோள்வது. இப்படிச் சாசங்காரம்பண்ணிப் பெற்றசாபலம் விகலையென்றறிந்து வரிசையால் ஏறிட்டுக் கலையாக்கி அன்பத்தேழு கலையை வேறேவைத்து முற்பட்டகேந்திரம் மகராதியாகில் அக்கலையைக் கூட்டுவது. கர்க்கியாதியாகிற் களைவது. இப்படிக்களைதல் கூட்டுதல் செய்துநின்றது இருவர்க்குங் கன்னமேன்று பெயராம். இவற்றை இரவிகன்னம் என்றுஞ் சசிகன்னம் என்றுந் தீட்டுவது. எறு.

விசேடவுரை.

மகராதி கர்க்கியாதி அறிந்து கோடியிற் சாக்கொண்டு கன்னம் அறிவதற்கு நியாயம் மந்தச்சாவிவரத்திற் காண்க.

கன்னமதறிந்து நீயே செல்லென்று கலைமதிக்கு
மன்னியகதிர்க்குவைப்பு மத்திமபுத்தியென்றுய்ந்
தன்னவை ஐம்பத்தேழாற் பெருக்கரிகன்னந்தன்னாற்
பொன்னனுய் இவையினுமம் புடபுத்தியென்று போற்றே ரு.

எது. "நீயேசெல்" என்ற எஅசு. கலை சந்திரனுக்கு மத்திமபுத்தியென்றும் "வைப்பு" என்ற ருகூ. கலை ஆதித்தனுக்கு மத்திம புத்தியென்றும் அறிந்து ருஎ.ஆல் பெருக்கிச் சசிகன்னத்தால் அரித்துப் பெற்றபலம் சசிப்புடபுத்தியென்றும் ஆதித்தன் மத்திமபுத்தியை ருஎ.ஆல் பெருக்கி இரவிகன்னத்தால் அரித்துப் பெற்றபலம் ஆதித்தபுடபுத்தியென்றும் வைப்பது. எ று.

விசேடவுரை.

கன்னம் ஏறப் புத்தி குறைந்தும் கன்னங் குறையப் புத்தி ஏறியும் வருமாதலால் திரைராசிக முறையாய்ப் புடபுத்தி அறியும்படி மத்திமகன்னமாகிய ௩சா௩அ. கலையை மத்திமபுத்தியாற் பெருக்கிப் புடகன்னத்தினுல் அரிக்க வேண்டும். மத்திமகன்னமாகிய ௩சா௩அ. கலையை சு௦.ஆல் அரிக்க ருஎ. கலையும் கஅ. விகலையுமாம். மத்திமகன்னமாகிய ௩சா௩அ. கலைக்கு மந்தச்சாவைச் சேர்த்துப் புடகன்னம் அறியவேண்டியவதனுல் இதனை சு௦.ஆல் அரிக்க ருஎ. கலையும் கஅ. விகலையும் மந்தச்சாவில் அறுபதில் ஒரு பங்குமாம். ஆதலால் ௩சா௩அ. கலைக்குப் பதிலாக ருஎ. கலையும் கலைப்படியில் மந்தச்சாவை அறுபதில் அரிக்க வேண்டியவதனுல் அதனை விகலைப்படியுமாக வைப்பது. கஅ. விகலை அர்த்தத்திற்குக் குறைந்ததினுல்த் தள்ளிவிடப்பட்டது.

புத்திகள் தீட்டி வெய்யோன் புடத்தினிற் புசையிற் சாக்கொண்
டுய்த்த சாபலத்தினுமம் புசாபலகலை என்றுன்னி
அத்தை ஒன்றேமுக்காலாற்றுக்கி ஆங்கதிலிரண்டை
நெய்த்திடுங்குழலாய் வாங்கி நின்றது பிராணனென்னே சு.

எது. ஆதித்தன்புடத்திலே புசாகோடிகொண்டு புசையிலே சாசங்காரம்பண்ணிப் பெற்ற சாபலத்தைப் புடரவி புசாபலகலையென்று தீட்டி இந்தக் கலையை ஒன்றேமுக்காலாற் பெருக்கி அதில் இரண்டலகு களையப் பிராணனென்று பெயராம். இத்தையுந் தீட்டுவது. எ று.

பிராணனை இருபத்தேழா லீபெறு கலை மதிக்குப்
பிராணனை ஆறுக்கீய விகலையாம் வெய்யோற் கீத்தைப்
பராமதிகலையினீக்கிப் பகலிராவாதிபத்தும்
இராவு நற்பகலும் இத்தை இருபதிற் பின்புகூட்டே எ.

எது. முன் தீட்டிவைத்த பிராணனை இருபத்தேழிலீந்து பெற்றபலம் சந்திரனுக்குக் கலையாம். இதை ஆறிலீந்து பெற்றபலம் ஆதித்தனுக்கு விகலையாம். இப்பலங்களை, ஆதித்தன் மேடமுதலான ஆறுக்குள்ளே நிற்கப் பகற்பத்துநாழிகைக்கு முன்பே உவாவரில் ஆதித்தன் சந்தி

ரன் தற்கால சுத்தப்புடத்திலே் களைவது. பகல் இருபது நாழிகைக்குப் பின்பே உவாவரினும் அஸ்தமித்து இரு பதுநாழிகைக்குப் பின்பே உவாவரினுங்கூட்டுவது. எறு.

விசேடவுரை.

*பிராணனென்பது மத்திம பகலரைக்குஞ் சுத்த பகலரைக்குமுள்ள வித்தியாசம். ஒன்றேமுக்காலாவது விஷவச்சாயாங்ரகுலம் இதனைச் சுத்தம்பண்ண இரண்டைவாங்குவது. அட்சம் சரநாடி விநாடி முதலியவற்றிற்குச் சுத்தம்பண்ண வேண்டியவதனால் திரிதீயசுத்தம்பண்ணுவது. ௬௬0. பாகைக்கு ஆதித்த மத்திமபுத்தியாகிய, ரு௬. கலையும், அ. விகலையுமானால், பிராணனுக்கு எத்தனை கலையென்று திரைராசிக முறைப்படி கணிக்கவேண்டியதால் பிராணனை ஆறுக்கீய விகலையென்றார். இந்தப்படியே, ௬௬0. பாகைக்குச் சந்திரமத்திம புத்தியேயானால் பிராணனுக்கெத்தனை கலையென்று பார்க்கவேண்டியமை பற்றிப் "பிராணனை இருபத்தேழிலீபெறு கலைமதிக்கு" என்றார்.*

கூட்டு மேடாதியாறேல் இவ்வகை கோன்முன்றேல்
வாட்டிய பொருளைக் கூட்டுங் கூட்டிய பொருளை வாட்டும்
ஈட்டிய நடுவிற்பத்தும் இரவிடைப் பத்தும் வேண்டாம்
கோட்டியநுதலாய் சேடங் கூறுமுப்புடமதென்றே அ.

எ து. ஆதித்தன் துலாமுதலான ஆறுக்குள்ளே நிற்கப் பகற் பத்துநாழிகைக்கு முன்னே உவாவரிற் கூட்டுவது. பகல் இருபது நாழிகைக்குப் பின் உவாவரிற் களைவது. இரவைக்கும் இப்படியே கோள்வது. பகல் நடுப்பத்திலும் இராநடுப்பத்திலும் உவாவரிற் பிராணசங்காரம் வேண்டாம். இப்படிக் கூட்டுதல் களைதல் செய்துநின்றதற்குத் திரிதீய புடமென்று பெயராம். இவையிற்றைத் தீட்டுவது. எ று.

*புடரவி கேந்திரத்திற் புசாபலம் இருபத்தேழீந்
திடமதிகலையாம் ஆறுக்கீந்திட விகலைவெய்யோற்
கடைய முப்புடத்தில் இத்தை அகற்றிமேடாதியாறேல்
நடைதரு துலாமுன்றேற் கூட்ட நாற்புடமதாமே. கூ.*

எது. முன்பு தீட்டிவைத்த இரவிகேந்திரத்தைப் புசாகோடிகொண்டு புசையிலே சாக்கொண்டு சாசங்காரம்பண்ணி நின்றசாபலத்தைப் புசாபல கலையென்று தீட்டிவைத்து, உஎ.ஆல் ஈந்து பெற்றபலம் சந்திரனுக்குக் கலையாம். ஆறுக்கீந்து பெற்றபலம் ஆதித்தனுக்கு விகலையாம். இப்பலங்களை ஆதித்தன் மேடாதி ஆறுக்குள்ளே நின்றுனகில் சந்திராதித்தர் திரிதீய புடங்களிலே களைந்து

ந் துலாதி ஆறுக்குள்ளே நின்றுற் கூட்டியும் பெற்றது இருவருக்குஞ் சதுர்ப்புடமென்று பெயராம். இவையிற்றையுந் தீட்டுவது. எ று.

விசேடவுரை.

ஆதித்தன் மந்தச்சாவைக் கூட்டிக் களைவதினல் மத்தியகாலமுஞ் சுத்தகாலமும் பிசகுபடும். ஆதலாற் சதுர்த்தசுத்தம் வேண்டியதாம். ஆதித்தனுக்கு ஆறினுலுஞ் சந்திரனுக்கு இருபத்தேழினுலும் அரித்து விகலை கலை காண்பதற்கு நியாயம் ஏழாம்பாட்டு விசேடவுரையிற் காண்க.

நாற்புடமதியின் ஒரை பாகைநன் கலையதாக்கிச்
சீர்த்தவெண்ணூற்றுக்கீயச் சென்னிமுன் சென்றநாளாம்
ஆற்றவீயாதசேடம் அறுபதாற்பெருக்கித் திங்கட்
காற்புடபுத்திக்கீயக் காணுநாட் கடிகையாமே. ய

எது. சதுர்ப்புட சந்திரனில் இராசி பாகையைக் கலையாக்கி எண்ணூற்றிலீந்து பெற்றபலம் அசுபதி முதலாகச் சென்றநாளாம். ஈந்தசேடம் அறுபதாற் பெருக்கிச் சந்திர புடபுத்தியைக் கலையதாக்கி அதனுலீந்து பெற்றபலம் செல்கின்றநாளிற் சென்றநாழிகையாம். அதனுல் இன்னநாள் இத்தனைநாழிகையிற் கிரகணமுண்டேன்றறிவது. எ று.

விசேடவுரை.

அ00. கலையாவது ஒரு நட்சத்திரத்தினது மத்திமப் பிரமாணம். அது கரு. பாகை உ0. கலைக்குச்சரி.

ஆன்ற நாற்புடமதிக்கே அருக்கனுற் புடத்தை நீக்கி
ஏன்ற வான்கலையதாக்கி எழுநூற்றேடிருபாற்கீந்தாற்
றேன்றினதந்தபக்கம் பதினைந்தும் அற்றுத்தாக்கில்
ஊன்றியவிருத்தை பன்னுன்குறில் உவாக்கலையதாமே. யக.

எது. சதுர்ப்புட சந்திரனிலே சதுர்ப்புட ஆதித்தனைக் களைந்து நின்றசேடத்தைக் கலையாக்கி, எஉ0. ஆல் ஈந்து பெற்றபலம் சென்றபக்கமாம். பதினைந்தும் அற்றுச் சேடம் நின்றுதாகில் பிரதமைக்கலை என்றும் பதினுலும் அற்றுச் சேடம் நின்றுதாகில் உவாக்கலையென்று பெயராம். எ று.

உவவினிற்கலையேல் ஏழ்நூற்றிருபதில் உதவைவாங்கத்
தீவ்வியசேடமென்கத் திதிக்குறை திங்கள்வெய்யோன்
அவர்புடபுத்திதன்னில் அகற்றிட ஒன்றிலொன்றை
விவரமாஞ் சேடமிக்க திதிக்குறை அறுபான் வீக்கே. யஉ.

எது. முன்பு பதினாலாம்பக்கம் அற்றுச் சேடம் நின்று தாகில் சேடமானகலையை, எ௨0. வைத்து அதிலே களைவது. களைந்துநின்றசேடந் தற்காலத்துக்குப்பின்பு பதினைந்தாம் பக்கஞ்செல்லக்கடவ நாழிகைக்குக் கலையாம். முன்பு கண்டபக்கம் பதினைந்தும் அற்றுச் சேடநின்றுதாகில் தற்காலத்துக்கு முன்பு பிரதமையிற் சென்றநாழிகைக்குக் கலையாம். இப்படித் தோற்றிநின்றது உவாக்கலையோ பிரதமைக்கலையோ என்றறிந்து இதனைத் திதிசேடமென்று தீட்டுவது. சந்திராதித்தர் புடபுத்திகளை வைத்துப் பெரியதிற் சிறியதைக்களைந்து நின்றசேடம் புடபுத்திவிவரம் என்று தீட்டித் திதி சேடத்தை அறுபதாற் பெருக்குவது. எ று.

வீக்கிய தொகையை முன்னை விவரத்துக்கீய நாடி
ஈத்திடாச்சேடந்தன்னை இருமுப்பாற் பெருக்கி முன்னீந்
தோச்சிட விநாடி இத்தை உவாவினுடியிலுங்கூட்டி
நாற்புடவெய்யோன்றிங்கட் கலையினு நாடிகூட்டே. யரு.

எது. முன்பு பெருக்கின தொகையைப் புடபுத்திவிவரகலையால் அரித்துப் பெற்றபலம் நாழிகையாகவைத்து ஈயாதசேடத்தை அறுபதாற்பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் விநாழிகையாம். இத்தை நாழிகைக்குக்கீழாக வைத்து இதனைத் தற்காலத்து உவாநாழிகையிலே கூட்டச் சுத்தபறுவமாம். இதைத் தீட்டி முன்பு நின்றநாழிகையைச் சதுர்ப்புட சந்திராதித்தர் கலையினும் விநாழிகையை விகலையினுங் கூட்டுவது. எ று.

கூட்டு நாற்புடமதிக்கே திதிக்குறைதனையுங் கூட்டித்
தீட்டுவாக்கலையதாகிற் றெரித்தது பிரதமையாகில்
வாட்டுதி எல்லாம் வாட்டித் திதிக்குறை மதிப்புடத்தில்
ஓட்டுதி இரவிதிங்கட்சமம் உவாச்சுத்தமாமே. யச.

எது. முன்புநின்ற நாழிகை விநாழிகை கூட்டி நின்ற சதுர்ப்புடசந்திரன் கலை விகலையிலே முன்புதெரித்து வைத்த திதிசேடத்தையுங் கூட்டுவது. முன்பு தீட்டினது உவாக்கலையாகில் எல்லாங்கூட்டுவது, பிரதமைக்கலையாகில் அந்த நாழிகையும் விநாழிகையும் உவா நாழிகையினுஞ் சதுர்ப்புட சந்திராதித்தர் கலை விகலையினுங் களைவது. களைந்துநின்ற சதுர்ப்புடசந்திரனிலே திதிசேடத்தையுங் களைவது. இப்படிக்கூட்டுதல் களைதல்செய்து நின்றது சமரவியுஞ் சமசந்திரனுஞ் சுத்தபறுவமுமாம். இவை

யிற்றைத் தீட்டிவைப்பது. இவை இரண்டு கிரகணத்து க்கும் போதுவாம். எ று.

## சூரிய கிரகணம்.

*சுத்தமாம் பிராணன்றன்னைச் சொல்லிய ஆறுக்கீய*
*அத்தகுவிநாடி இத்தை ஐமூன்றுகடிகைதன்னிற்*
*சித்திரைமுதலாமாறிற் செங்கதிர் நிற்கிற்கூட்டு*
*பைத்துலையாதியாறேற் கனை பகலரையதாமே.* யரு.

எது. சூரிய கிரகணம் எண்ணும்படி முன்பு தீட்டி வைத்த பிராணனை ஆறுக்கீந்து பெற்றபலம் விநாழிகை யாம். ஆதித்தன் மேடாதியாகில் கரு. நாழிகையை மே லேவைத்து இந்த விநாழிகையைக் கூட்டுவது, துலாதியா கிற் கழிவது. இப்படிச் செய்துநின்றது பகலரை என் று பேயர்ாம். இதனைத்தீட்டுவது எ று.

## விசேடவுரை

*பிராணன் நாடிமண்டல கலையாயிருப்பதால் அதனை ஆறுக்கீய விநாழிகையாகும் என்றறிக*

*பகலரை இரட்டிசெய்யப் பகலளவறுபானுடி*
*அகலவைத்திதனை நீக்க அல்லளவாகும் இத்தைப்*
*பகர்தரு பாதியாக்கிப் பகலளவோடேகூட்டி*
*இகலும்வேற்கண்ணாய் நின்ற திராவரையாகுமென்னே.* யசு.

எது. முன்புசோன்ன பகலரையை இரட்டிக்கப் பக லளவாம். அறுபதுநாழிகையை வேறேவைத்துப் பகல ளவைக்கழிந்து நின்றசேடம் இராவளவாம். இத்தைப் பாதியாக்கி இராவளவோடேகூட்ட இராவரையாம். எறு

*ஆம்பகலரையுஞ் சுத்த பறுவமும் அகலவைத்துத்*
*தேம்பதிற் சிறுமை நீக்கிப் பெரியதில் விவரம்சேடம்*
*ஒம்புறு விவரநாடி ஒன்றுக்கோர் சாவாய்நீக்கி*
*ஏம்புறு விநாடி கீழ்வைத்தெய்திய சாமேல்வையே.* யஎ.

எது. முன்புதீட்டின சுத்தபறுவத்தையும் பகலரை யையும் வேறேவைத்துப் பெரியதிற் சிறியதைக்கழிந்து நின்றது விவரமென்று பேயராம். இத்தைத் தீட்டிவைத் து இந்த விவரத்தில் நாழிகையையும் வைத்து விநாழி கை உண்டாகிலுங் கீழேவைத்து இதில் ஒரு நாழிகைக் கு ஒரு சாவாகக்கோண்டு மேலேநின்ற நாழிகையைக்

களைந்து பெற்றசாவை விநாழிகையின் மேலாக நிறுத்துவது. எ று.

இலம்பிதச் சா.

| | |
|---|---|
| க. தாறீர் | அ. நீரோதான் |
| உ. தாதேனே | கூ. விண்கண்டான் |
| ௩. மால்பதம் | க0. வேல்கண்டான் |
| ச கோவீசன் | கக. நீதாதா |
| ரு. பொற்பூகம் | கஉ. குன்றுதான் |
| சூ. போர்வேலன் | க௩. குன்றுதான் |
| எ. வாகையன் | கச. குன்றுதான் |

*வைத்த சாவதன் பின்சாவை விநாடிக்குக் கீழேவைத்து*
*மெத்த மேற்சாக் கீழ்நீக்கிச் சேடத்தால் விநாடிஏற்றி*
*அத்தை ஒரறுபாற்கீந்த பேறதின்மேலே கூட்டி*
*எத்தனிநாடியாக்கி இலம்பிதபலமென்றெண்ணே* ௰அ.

எது மேல்நிறுத்தின சாவின் பின்சாவை விநாழிகைக்குக்கீழாகவைத்து மேற்சாவைக் கீழ்ச்சாவிலே களைந்து நின்றசேடத்தால் நடுவில்நின்ற விநாடியைப் பெருக்கி அறுபதால் அரித்துப் பெற்றபலம் மேற்சாவிலே கூட்டி அத்தை அறுபதால் ஏறிட மேலே நின்றது நாடியுங் கீழே நின்றது விநாடியுமாம். இத்தை இலம்பித சாபலமென்று தீட்டுவது. கீழ்ச்சாச் சுருங்கிவரில் கீழ்ச்சாமேற் சாவாக வைத்துக் களைந்து நின்றதை இலம்பிதசாபலமென்று தீட்டுவது. எ று.

*எண்ணியவிதனை முன்வனை விவரத்திற் கூட்டி ஆறால்*
*ஒண்ணுதல் பெருக்கி உச்சி முன்னுவாவறுமேல் இத்தைப்*
*பண்ணிய சமரவிக்கே பாங்குறக்கவளயும் போதேல்*
*எண்ணுறக்கூட்ட முன்போல் இலம்பிதவருக்கனுமே* ௰கூ.

எது. முன்புதெரித்த விவரத்தையும் இலம்பிதசாபலத்தையுங்கூட்டி ஆறினுற் பெருக்கினல் நாழிகை பாகையாம். விநாழிகை கலையாம். இத்தை முன்புதீட்டின சமரவியிலே உச்சிக்கு முன்னுகிற் களைவது உச்சிக்குப் பின்பு உவாவரிற் கூட்டுவது, நின்றதிலே அயனசலனமுங்கூட்டி நின்றது இலம்பிதவாதித்தனும். எ று.

*இலம்பிதவிரவி திக்கு மேடமுத்தரங் கோல் தெற்குப்*
*புலம்படவறிந்து நின்ற புசையினிற் சாக்கொண்டச்சா*
*பலந்தனை ஏழுக்கீந்த பலங் கலை சேடந்தாக்கி*
*இலங்கிழை விகலையீந்த திரவிவிக்கேபமென்றும்.* உ௰.

எது. இலம்பிதவாதித்தன் மேடாதி ஆறுக்குள்ளே நி ன்றாகில் உத்தரகோளம் என்றும் துலாதி ஆறுக்குள் ளே நின்றாகில் தக்கணகோளம் என்றும் அறிவது. அ றிந்து புசாகோடிகொண்டு கோடியுற்றாற் புசையாக்கிப் புசையிலே சாக்கொண்டு சாசங்காரம்பண்ணிச் சாபலத் தை ஏழால் அரித்துப் பெற்றபலங் கலையாம். சேடமுண் டாகில் அறுபதிற்பெருக்கி முற்கருவிக்கீந்தபலம் விகலை யாம். இத்தை இரவிவிக்கேபமென்று தீட்டுவது. எ று.

*என்று முன்றீட்டிவைத்த இலம்பிதசாபலத்தை*
*நின்ற பன்மூன்றிற்றாக்கி நிரம்பியசமசோமன்றன்*
*ஒன்றிய விகலைநீக்கி உச்சிமுன்னுவாவேற் பின்னேல்*
*நின்றது கூட்டிவைக்க இலம்பிதவிந்துவாமே.* உக.

எது. முற்படத் தீட்டிவைத்த இலம்பித சாபலத்தை ப் பதின்மூன்றாற் பெருக்கிச் சமசந்திரனுடைய விகலைக லைகளிலே உச்சிக்குமுன்பே உவாவரிற் கழிவது, பின்பு உவாவரிற் கூட்டுவது. இப்படிச் செய்துநின்றது இலம் பிதசந்திரனும். எ று.

*இந்துவில் அரவை நீக்கி இருந்ததிற் கொறிகோல் ஆய்ந்து*
*புந்தியிற் புசை அறிந்து புசையிணைக் கலையதாக்கி*
*வந்தபன்மூன்றுக்கீந்து பெறுபல மதிவிக்கேபம்*
*அந்தில் அக்கரவிக்கேபம் அங்குலம் ஏழாம் என்றும்* உஉ.

எது. இலம்பிதசந்திரன் எண்ணிநின்றதில் இராகு வைக்கழிந்து நின்றசேடம் மேடாதிதுலாதி அறிந்து மே டாதியாகில் உத்தரகோளம் என்றுந் துலாதியாகில் தக் கணகோளமென்றும் அறிந்து தீட்டிப் புசாகோடிகொண் டு புசாசேடத்தைக் கலையாக்கி இக்கலையைப் பதின்மூ ன்றால் அரித்துப் பெற்றபலம் சந்திரவிக்கேபம் என்றறி வது. இச்சந்திர விக்கேபம் மேடாதியாகில் உத்தரவிக் கேபம் என்றுந் துலாதியாகில் தெக்கணவிக்கேபம் என் றுந் தீட்டிவைத்து விஷுவச்சாயாங்குலம் ஒன்றேமுக்கா ல்வைத்து நாலாற்பெருக்க ஏழாம். இது தக்கண அக்கர விக்கேபமென்று அறிவது. எ று.

விசேடவுரை.

*சந்திரவிக்கேபம் அறியும்படி புசாசேடகலையைச் சந்திரபரமாப மமாகிய உசo. கலையாற்பெருக்கித் திரிசாவாகிய ௩சா௩அ. கலைக்கீ யவேண்டும். உசo. ஆல் பெருக்கி ௩சா௩அ. ஆலீவது க. ஆல் பெருக்*

கி கூ. ஆலீவதற்குச் சரியாமாதலால் "புசையிணைக் கலையதாக்கி வந்த பன்மூன்றுக்கீந்து பெறுபல மதி விக்கேபம்" என்றது.

விஷுவச்சாயாங்குலம் ஒன்றேமுக்கால் என்றதினால், சயந்தமா லை உண்டாக்கின இடத்துக்கு அட்சம், பாகை அ. கலை கஅ. என்று அறியலாம்.

என்றதுதெற்காம் என்றும் விக்கேப மூன்றும் ஒன்றாய்ச்
சென்றதேல் அதுவே திக்காம் இரண்டோன்றாய் ஒன்றோன்றாகில்
பின்னை மேலிரண்டும் வைத்துப் பெரியதிற்சிறுமைவாங்க
அன்னதே திக்காம் சுத்தவிக்கேபந்தானும் அஃதாம். உஙு.

எது. முன்புகண்ட தக்கண விக்கேபத்துக்கு என்றுந் தக்கணகோளமே திக்கென்றறிவது. இதுவும் முன்பு சொன்ன இரவிவிக்கேபமும் சந்திரவிக்கேபமும் ஒரு திக்காய்வரில் அதுவே திக்கென்றறிந்து இம்மூன்றையுங் கூட்டிச் சுத்தவிக்கேபம் என்று தீட்டுவது. இரண்டோருதிக்காய் ஒன்றோருதிக்காய் மாறிவரில் ஏகதிக்கானதைக்கூட்டி வேறேவைத்து ஒன்றோரு திக்கானதையும் வேறேவைத்து இரண்டினும் பெரியதிற் சிறியதுகளைந்து நின்றசேடம் சுத்தவிக்கேபம் என்றுதீட்டி, அதுவே திக்கென்று சொல்லுவது. எ று.

தான்மதி கதிரோன்றங்கள் புடபுத்தி பதினாறேற்றி
ஏனமத்திமமாம் புத்திக் கீந்த பேறிரண்டுங் கூட்டி
ஈனமில் சம்பற்கார்த்தம் இதிற்சுத்தவிக்கேபத்தைப்
பூனக கனையவுண்டேற் கிராணமே இல்லேற்பொய்யே. உச.

எது. முன்புதீட்டிவைத்த சசிப்புட புத்தியையும் அருக்க புத்தியையும் வெவ்வேறே வைத்து இவையிற்றைப் பதினாற்பெருக்கித் தத்தம் மத்திம புத்திகளாலீந்து பெற்றபலம் இரவிதேகமுஞ் சசிதேகமுமாம். இவை இரண்டுதேகத்தையுங் கூட்டச் சம்பற்கார்த்தமாம். இந்தச் சம்பற்கார்த்தத்தை வைத்து இதிலே முற்பட்ட சுத்த விக்கேபத்தைக் களைந்தால் சேடமுண்டாகிற் கிரகணமுண்டு. இந்த விக்கேபம் பெருக்கினும் சம்பற்கார்த்தத்தோடொக்கினுங் கிரகணமில்லை. எ று.

விசேடவுரை.

கசு. என்பது சந்திரசூரிய மத்திமதேகங்கள் அல்லது விம்பார்த்தங்களாகிய கலையாம். புடபுத்திகள் ஏறிக்குறையச் சூரியசந்திரதேகங்களும் ஏறிக்குறையுமாதலால் இந்தப்பாட்டின்படி பெருக்கி அரிப்பது.

*பொய் மெய்யதறிந்து மூன்பு களைந்ததிற் சேடந்தன்னை*
*இம்மை ஒன்றிரண்டு மூன்றுறெட்டோடீராறு வாங்கிப்*
*பொம்மென ஒன்றுகூட்டிப் போதாதசேடம் வாங்கி*
*மெய்மையோரறுபான்றக்கி மேல்வருங் கருவிக்கீயே.* ௨௫.

எது. சுத்த விக்கேபங் களைந்து நின்ற சம்பற்கார்த்த கலையிலே திதிநாடி கோள்ளும்படி, ஒரலகு வாங்கிப் பலம் ஒன்று வேறே வைத்து இரண்டலகு வாங்கிப் பலம் ஒன்று கூட்டுவது. மூன்றலகு வாங்கிப் பலம் ஒன்று கூட்டுவது. ஆறலகு வாங்கி ஒன்று கூட்டுவது. எட்டலகு வாங்கி ஒன்று கூட்டுவது. பன்னிரண்டலகு வாங்கி ஒன்று கூட்டுவது. இப்படியே கூட்டி வாங்கப்போதாத சேடத்தை அறுபதாற் பெருக்கி மேல்வாங்க வருகிற கருவிக்கீவது. எ று.

*ஈவது விநாடிமுன்பீந் துற்றது நாடி இத்தை*
*ஆய்திதிநாடியென்றுங்கதுவாறேன் முழக்கப்பற்றும்*
*பாய்திதிநாடிப்பாதி உவாவினிற் களையப்பற்றும்*
*ஏதகும் இந்நாடிக்கே உவாநாடி கூட்ட வீடே.* ௨௬.

எது. மூன்பு ஈந்து பெற்றபலம் முதல் வாங்கிவைத்த பலத்தின்கீழே வைத்து மேல்நின்றது நாழிகையும் கீழ்நின்றது விநாழிகையும் என்றறிவது. இப்படிவந்த திதிநாடி ஆறுவரில் சர்வக்கிரகணம் என்றறிவது. இந்தத் திதிநாடியைப் பாதிசெய்யத் திதியர்த்த நாடியாம். முன்பு தீட்டின சுத்தபறுவநாழிகையை இரண்டுபடியாக வைத்து ஒரு படியிலே திதியர்த்த நாழிகையைக் களைந்து நின்றது பரிசநாடியாம். மற்றப்படியிலே திதியர்த்தநாடியைக்கூட்டி நின்றது மோட்சநாடியாம். எ று.

*கூட்டிய பரிசநாடி கூர்பகலரை வேறேவைத்*
*தோட்டிதிற் சிறுமை முன்போல் ஒருநாடிக் கொருசாவாக*
*மூட்டு சாபலத்தைப் பற்றுநாடியிற் களை முற்போதேற்*
*கோட்டலர் குழலாய் பின்பேற் கூட்டிடச் சுத்தபற்றும்.* ௨௭.

எது. பரிசநாடியினும் பகற்பாதியினும் பெரியதிற் சிறியதைக் களைந்து நின்ற விவரத்திலே முன்புபோலே ஒருநாழிகைக்கோரு சாவாக இலம்பித சாபலங்கோண்டு இந்தப் பரிசநாடியிலே உச்சிக்கு முன்பாகிற் களைவது பின்பாகிற் கூட்டுவது. இப்படிச் செய்துநின்றது சுத்த பரிசநாடியாம். எ று.

*பற்றிடும் விடுதிநாடி பகலரை வேறே வைத்துச்*
*சிற்றிடை பெருமைதன்னிற் சிறியது களைந்து சேடத்*

துற்றசாபலத்தை வீட்டிற் கலைவது முன்னேற் பின்னேல்
விற்றருநுதலாய் கூட்ட விடுதிநாழிகைக்குச் சுத்தம். உஅ.

எது. மோட்சநாடியினும் பகற்பாதியினும் பெரியதிற் சிறியது களைந்து நின்ற விவரத்திலே முன்புபோலே இலம்பித சாபலங்கொண்டு அந்தச் சாபலத்தை மோட்சநாடியிலே உச்சிக்கு முன்னாகிற் களைந்து பின்னாகிற் கூட்டச் சுத்தமோட்சநாடியாம். எ று.

விசேடவுரை.

தக்கணகோளமாகில் தென்மேற்கே பற்றும். உத்தரகோளமாகில் வடமேற்கே பற்றும். சம்பற்கார்த்தத்தை ஒருகலைக்கு ஓர் அங்குலமாகக்கொண்டு ஒருகயிற்றை ஒருமண்டலமாக்கி அதன்நடுவே இரவிதேகத்தை இத்தனை அங்குலம் என்றறிந்து அதினாலே ஒருமண்டலாகாரமுறித்து இதன் நடுவேநின்று சுத்தவிக்கேபம் இத்தனை அங்குலம் என்று அறிந்து அம்முனையிலே நின்று அதனையும் ஒருமண்டலமாக முறித்துவரிற் சசிதேகமானதெவ்வாறு சென்றது அவ்வளவு பற்றுமென்றறிவது.

சந்திர கிரகணம்.

சுத்தமாஞ் சமமதிக்கே தொல்லராவதனை நீக்கிப்
பொய்த்த மேடாதி ஆய்ந்து புசையினைக் கலையதாக்கிப்
பத்தொடு மூன்றுக்கீந்து பெறுபலம் மதிவிக்கேபம்
உத்தரகோளந் தெற்காம் உயர்தெற்கு வடக்கென்றே. உகூ.

எது. சந்திரனை முன்போல எண்ணிச் சமசந்திரனிலே இராகு சுத்தபுடத்தைக் களைந்து மேடாதி உத்தரகோளம் என்றும் துலாதி தக்கணகோளம் என்றும் அறிந்து புசாகோடிகொண்டு புசாசேடத்தைக் கலையாக்கி அக்கலையைப் பதின்மூன்றுக்கீந்து பெற்றபலம் கலையாகவைத்துச் சேடமுண்டாகில் அறுபதாற்பெருக்கி முற்கருவியால் அரித்துப் பெற்றபலம் விகலையாகவைத்து இதனைச் சந்திரவிக்கேபம் என்று தீட்டுவது. எ று.

வடங்கொள் பன்னறில் ஏற்றி மதிப்புடபுத்திதன்னைத்
திடங்கொள் மத்திமமாம் புத்திக்கீபலந் திங்கடேகம்
படர்ந்த ஈதைந்தாற்றுக்கிப் பாதிசெய் பாம்பின்றேகம்
தடங்கொள இரண்டுங்கூட்டி நின்றது சம்பற்கார்த்தம். ௩௰.

எது. சசிப்புடபுத்தியைப் பதினாற்பெருக்கி, எஅச. ஆல் ஈந்து பெற்றபலம் சசிதேகமாம். இத்தை ஐந்திற்பெ

ருக்கிப் பாதியாக்க இராகு தேகமாம். இத்தேகம் இரண்டையுங் கூட்டச் சம்பற்கார்த்தமாம். எ று.

*சம்பற்கார்த்தத்திற் றிங்கள் விக்கேபங் களைந்தசேடத்*
*திம்பரோன் ஞென்றிரண்டு மூன்று நாலுங்தாறெட்டு*
*உம்பர் பன்னிரண்டு பன்னான் கெடுத்ததற்கொன்று முன்போல்*
*இம்பரில் வைக்க நாடி ஈரைந்தேல் முழுச்சுப்பற்றும்.* ௬௧.

எது. சம்பற்கார்த்தத்திலே சந்திர விக்கேபத்தைக் களைந்து நின்றசேடத்தில் ஓர் அலகுவாங்கி பலம் ஒன்று வைப்பது. பின்னையும் ஒன்று வாங்கி முன்பு வைத்ததிலே கூட்டுவது. பின்னையும் இரண்டுவாங்கி ஒன்று கூட்டுவது. பின்பு மூன்றுவாங்கி ஒன்று கூட்டுவது. பின்பு நாலுவாங்கி ஒன்று கூட்டுவது. பின்பு கஉ. வாங்கி ஒன்று கூட்டுவது. பின்பு கச. வாங்கி ஒன்று கூட்டுவது. இவை போதாதவைக்கு முன்போலே அறுபதிற்பெருக்கி மேல்வருங் கருவியால் அரித்து விநாடியாக்கி முன்பு வைத்த நாடியின்கீழே வைப்பது. இத் திதிநாடி பத்தேயாகில் முழுக்கிரகணமாம். எ று.

*பற்றினதறிந்து நின்ற பக்கநாடியினிற் பாதி*
*உற்றுவாநாடிதன்னில் ஒழித்திடப் பற்றுநாடி*
*பற்றிய உவாநாடிக்கே பக்கநாடியிவைக் கூட்ட*
*வெற்றிவேல்விழியாய் பாம்பு விடுநாடியென விளம்பே.* ௬௨.

எது. திதிநாடியைப் பாதிசெய்து சுத்தபறுவ நாடியிலே களையப் பரிசநாடியாம். பறுவ நாடியிலே கூட்ட மோட்ச நாடியாம். எ று.

விசேடவுரை.

உத்தரகோளமாகில் வடகிழக்கே பற்றும். தக்கண கோளமாகில் தென்கிழக்கே பற்றும் என்றறிக. முன்பு போலே சம்பற்கார்த்தத்தாலே ஒருமண்டலமுறித்து அதன் நடுவே சசிதேகத்தாலே ஒருமண்டலம் வைத்து இதன்நடுவே சுத்தவிக்கேபத்தை நாட்டிப் பற்றுகிறதிக்கிலே கிடத்தி அதின் முடிவிலே முளையைப் புடைத்து அம்முளையிலே நின்று இராகு தேகத்தாலே ஒருமண்டல முறித்தால் இராகு தேகமாம். இது சசிதேகத்தில் எவ்வளவு சென்றது அவ்வளவு பற்றுமென்றறிக.

# வாக்கிய கரணம்.

## கிரகணம் எண்ணல்.

க. இட்ட சுத்ததினத்திலே "சீரேவைத்தோன்றேல் ஹரன்" என்று களைந்து நின்றசேடத்தைக் "காரேளில் மாயன்" என்றதற்கரித்துப் பெற்றபலம் முதற் பலமாம். நின்றசேடத்தை "மதிசோதி" என்றதற்கரித்துப் பெற்ற பலம் இரண்டாம் பலமாம். பின்பு நின்றசேடத்தைத் "தேடீர்வாள்" என்றதற்கரித்துப் பெற்றபலம் மூன்றும் பலமாம். பின்பு ஈயாமல் நின்றசேடம் அற்றைவாக்கிய மாம்.

வேறே சர்ப்பாகாரமாகச் "சொல்லக்கேளீர் செய்யாளை" என்றும், "கற்றேன் மதியேன்போன் மகன்" என்றும், "தூயோன் சீர்சீரேம்மான்" என்றும், வெவ்வேறே வைத்து முதல் வாக்கியத்தை முதற்பலத்தாலும், இரண்டாம் வாக்கியத்தை இரண்டாம்பலத்தாலும், மூன்றும் வாக்கியத்தை மூன்றும் பலத்தாலும் பெருக்கிக் கீழ்ப்படி இரண்டும் விகலை கலை சூ0. ஆல் ஏறிட்டு மேற்படி பாகை ௩0. ஆல் ஏறிட்டு இராசி மிகுத்தால் கஉ. இற் களைந்து நின்ற மூன்றுரூபத்தையும் தானந்தப்பாமல் ஒன்றுய்க்கூட்டி இதிலே "செம்பொற் போதோமாலோன் பெண்" என்று கூட்டி விகலையை ஏறிட்டு வாங்கிப்போட்டு நின்றது சசித்துருவமாம். இதிலே அற்றைவாக்கியத்தைக் கூட்டச் சந்திரப்புடமாம் அற்றைவாக்கிய புத்திதானே சந்திரபுத்தியாம்.

விசேட வுரை.

*சசித்துருவம் காணுவதற்கு விவரம் உஎ.ம், உஅ.ம், பக்கத்து விசேடவுரைகளிற் காண்க. இந்தநூலின்படி மூலத்துருவங் கட்டியது. கஉஅஉ ங் கிறிஸ்த ௵. சித்திரை மாதம் என்றுகாணலாம்.*

உ. ஆதித்த புடம் எண்ணும்படி,—கெதமாதமும் அற்றைத் தேதியும் வைத்துச் சங்கிரமம் பகலாகிற் களைந்தும் இரவாகில் சூ0.இற் சேடங் கூட்டியும் யோக்கியாதி மீனாதி களைந்துந் துலாதி கூட்டியும் நின்றது ஆதித்த புடமாம். அந்தந்த மாதத்துக்குச் சொன்ன புத்திதானே அர்க்கபுத்தியாம்.

௩. சேனகல சங்காரம்பண்ணும்படி—"மதிசோதி" பலத்தை, ௩௨.ஆலும் "தேடீர்வாள்" பலத்தை ௪.ஆலும் பெருக்கி வெவ்வேறே வைத்துப் பெரியதிற் சிறியதைக்களைந்து நின்றதை ௬0.ஆல் ஏறிட்டு நின்றது விநாடியாம். இது "மதிசோதி" பலத்திற் பெருக்கினது பெருத்தால் இருண விநாடியென்றும் "தேடீர்வாள்" பலத்தாற் பெருக்கினது பெருத்தால் தன விநாடியென்றும் அறிவது.

வேறே "மனந்திடம்" என்ற சர்ப்பாகாரமான மத்திம புத்தியையும் சந்திரபுத்தி பாகை கலையையும் பெரியதிற் சிறியது களைந்து, களையுமிடத்து மத்திமபுத்தி பெருத்தால் முன் எண்ணிவைத்த விநாடி தனம் இருணமாம், இருணந் தனமாம். சந்திரபுத்தி பெருத்தால் முன்கண்டபடியே தனந்தனமாம், இருணம் இருணமாம். இப்படிக்கண்ட விநாடியாலே சந்திரபுத்தியையும் மத்திம புத்தியையும் அந்தரித்து நின்றசேடத்தைப் பெருக்கி இருபடியும் ௬0.ஆல் ஏறிட்டு வாங்கி நின்ற மூன்றும்படி கலை சேனகல சங்காரம் என்றுபேயராம்.

விசேடவுரை.

*"மதிசோதி" என்றுந் "தேடீர்வாள்" என்றும் ஈந்து சசித்துருவங் கட்டுவதினால் வரும்பிழையை ஒழிக்கும்படி சேனகல சங்காரம் பண்ணுவதென்றறிக.*

௪. இதைச் சந்திரப் புடத்திலே தனமானாற் கூட்டி இருணமானாற் களைவது,---சேனகல சங்காரம் இல்லாதிருந்தால் முன்பு நின்றதுதானே புசாந்தர சந்திரப் புடமாம்.

௫. அயனசலனம் எண்ணும்படி—கலியப்தத்திலே "போவோங்கூடி" என்று களைந்து நின்றதை இருபடி செய்து ஒருபடியைச் "சந்தானம்" என்றதற்கீந்து பெற்றபலத்தை மற்றப்படியிலே களைந்து நின்றதை ௬0.ஆல் ஏறிட்டு நின்றது அயனசலனமாம்.

அயனசலனத்தையும் ஆதித்திய புடத்தையுங் கூட்டச் சாயனரவியாம்.

விசேடவுரை

*கலியப்தம் ௩௬00. சென்றபின் அயனசலனம் எண்ணத்தொடங்கியபடியால் கலியப்தத்திலே "போவோங்கூடி" என்று களைவது*

*ஒருவருடத்துக்கொருகலை அயனசலனம் என்று கணக்குப்பண்ணினல், கஉக வருடத்துக்கு, க கலை விலகும் ஆதலால் "சந்தானம்" என்றீந்து கனவது. இந்நூலின்படி ஒருவருடத்துக்கு அயனசலனம் அல்லது அயனகதி, ருகூஇ. விகலையாம்.*

௬. சரவிநாடி---இந்தச் சாயனரவியிலே மேடாதி துலாதி அறிந்து புசாகோடிகோண்டு கோடியுற்ருற் புசையாக்கி நின்றதில் இராசி எத்தனையோ அத்தனையாம் புசை வாக்கியத்தை மேலேவைத்து அதற்குப் பிந்தினவாக்கியத்தாலே நடுநின்ற பாகை கலையைப் பெருக்கி ஏறிட்டு ௬0.ஆல் அரித்து நின்ற மூன்ரும்படி விநாடியை மேலே வைத்த புசை வாக்கியத்திலே மேடாதிகூட்டித் துலாதிகளைந்து நின்றது சரவிநாடியாம்.

புசை வாக்கியம்.

தேடீர்---க.
பேடி—உ.
கூடம்—௬.

விசேடவுரை.

*மூன்ரும் புசைவாக்கியத்தினலே பெருக்கினல் பெற்றவிநாடியோடே முதல் இரண்டு வாக்கியத்தையுங் கூட்டிக்கொள்க. இரண்டாம் வாக்கியத்தாற் பெருக்கினல் முதல்வாக்கியத்தையுங் கூட்டுவது. சாயனரவியைப் புசையாக்கிப் புசையில் ஒரு இராசியிருந்தால் "தேடீர்" என்றது சரவிநாடியாம். இரண்டிராசியிருந்தால், "தேடீர்" "பேடி" என்ற வாக்கியங்களைக் கூட்டிச் சரவிநாடி அகூ. என்றறிவது. மூன்றிராசியிருந்தால் மூன்று வாக்கியங்களையுங் கூட்டிச் சரவிநாடி க0உ. என்றறிவது.*

எ. இராசியில்லாதிருந்தால் முதல்வாக்கியத்தாலே பாகை கலைகளைப்பெருக்கி ஏறிட்டு நின்ற மூன்ரும்படி சரவிநாடியாம். இந்தச் சரவிநாடியும் முந்தின மேடாதி துலாதியின் படியே இருணம் தனம் என்றறிவது.

வேறே, ௬0. வைத்துச் சரவிநாடி தனமாஞற் கூட்டியும் இருணமாஞற் களைந்தும், நின்றது திவாமானமாம். முந்தின சரவிநாடியைப் பாதிசெய்தது சரார்த்த விநாடியென்று பேயராம். இதைத் தனம் இருணம் அறிந்து வைப்பது.

அ. வேறு தேசாந்தரம் எண்ணும்படி---கருவூருக்குக் கிழக்கு இருணமும் மேற்குத் தனமுமாகையால், கிழக்

கு யோசனை கசூ. இதை கூ0.ஆல் பெருக்கி ருந.ல் ஈங்
து பெற்றபலம் தேசாந்தர இருணவிநாடியாம்.

விசேடவுரை.

இந்நூல் செய்யப்பட்ட கருவூருக்கு, உத்தராட்சம் பாகை, க0. கலை, ருஈ. இங்ஙனங் கூறப்பட்ட இருண தேசாந்தரத்தினால், இராமேஸ்வரமளவில் மத்தியரேகை கொள்ளப்பட்டதென்று காணலாம். இந்த இராமேஸவரம் சோதி சாஸதிரத்திலே பெயர்போனதும் அச் சாஸதிரத்துக்கடுத்த சோதனைகள் பண்ணுவதற்கான மண்டபங்களை உடைத்தாயும் அந்தச் சாஸ்திரத்தில் எழுதப்பட்ட அநேக நூல்களுக்கு மத்தியரேகாஸதலமுமாயிருந்தது. அதின் உத்தராட்சம் பாகை, கூ. கலை, கஅ. கிறீனுவிசிலிருந்து கிழக்குத் தேசாந்தரம், பாகை, எகூ. கலை, உஉ. விகலை, ரு.

கூ தோறுவிவரம் எண்ணும்படி—ஆதித்தபுடத்தை வைத்து மிதுனாதி இருணமுந் தனுவாதிதனமும் என்று கண்டு மேல்நின்ற இராசியை எடுத்துப்போட்டு அத்தனையாந் தோறுவிவரவாக்கியத்தைப் பாகை கலைக்குமேலே வைத்து அதற்குப் பிந்தினவாக்கியத்தைக் கீழேவைத்து இரண்டு வாக்கியங்களையும் அந்தரித்து வந்த விநாடியினால் நடுநின்ற பாகை கலைகளைப் பெருக்கி ஏறிட்டு ஙூ0. ஆலீந்து நின்ற மூன்றும்படியை, மேலேவைத்த வாக்கியம் பெருத்தால் அதிலே களைவது, சிறுத்தால் அதிற் கூட்டுவது, இரண்டு வாக்கியமும் ஒத்திருந்தால் முன்சொன்னபடி பெருக்கியீயவேண்டாம். இப்படி எண்ணிக்கண்டது தனம் இருணப்படி தோறுவிவர விநாடியாம்.

தோறு வாக்கியம்.

| | |
|---|---|
| க. கூடம். | எ. கூடம். |
| உ. செல்லோ. | அ. கூத்தோ. |
| ஙூ. குன்றே. | கூ. வீறே. |
| ச. குடம். | ய. வீரம். |
| ரு. வந்தான். | யக. மோடா. |
| சூ. தந்தான். | யஉ. வந்தான். |

விசேடவுரை.

ஆதித்தன் சாவாக்கியத்தைக் கூட்டிக் களைவதினால் மத்திமகாலமுஞ் சுத்தகாலமும் பிசகுபடும். அவ்விரண்டுக்குமுள்ள வித்தியாசமே தோறுவிவரமென்று சொல்லப்பட்டது.

௰. இந்தத் தோறுவிவர விநாடியையுஞ் சரார்த்த விநா டியையும் தேசாந்தர விநாடியையும் தனமுந் தனமும் இருணமும் இருணமுமாகக் கூட்டிப் பெரியதிற் சிறிய தைக் களைந்து பெரியதிற்றனம் இருணப்படி கண்டது சரார்த்தாதி விநாடியாம்.

௰க. இந்தச் சரார்த்தாதி விநாடியை இருபடிவைத்து ஒருபடியைச் சந்திரபுத்தியாலும் ஒருபடியை ஆதித்த புத்தியாலும் வெவ்வேறே பெருக்கி ௬0.ஆல் ஏறிட்டு நின்ற மூன்றும்படி கலையைச் சந்திரபுடத்திலும் ஆதித்த புடத்திலும் தனமாகிற் கூட்டி இருணமாகிற் களைந்து நின்றது சுத்தசந்திர புடமும் ஆதித்த சுத்தபுடமுமாம். மூன்றும்படி கலையில்லையாகிற் சந்திராதித்தர் இருவருக்கும் முன்புநின்றதுதானே சுத்தபுடமாம்.

இந்தச் சுத்தசந்திரனிலே சுத்த ஆதித்தனை வாங்கிப் பூரணை அமாவாசை எடுத்துச் சேடத்தைக் கலைசெய்து, ௬0.ஆற் பெருக்கிக் கீழே சந்திரபுத்தியை வைத்து அருக்கபுத்தியைக் களைந்து நின்றது அந்தரபுத்தியென்று தீட்டி இந்தப் புத்தியாலே மேல்நின்றதை ஈந்து பெற்றபலம் நாடியாம். சேடத்தை ௬0.ஆற் பெருக்கி ஈந்துபெற்றபலம் விநாடியாம். இந்த நாடி விநாடி திருதியென்று பெயராம். இத்தை ௬0.இற் களையப் பறுவநாடி விநாடியாம்.

விசேடவுரை.

*அந்தரபுத்திக்கு, ௬0. நாடியானால் நடுநின்றகலைக்கு எத்தனை நாடியென்று கணக்குப்பண்ண வேண்டியவதனால், முற்கூறியபடி பெருக்கி அரிப்பது.*

௰௨. வேறே திருதியை இருபடியாகவைத்து ஒருபடியைச் சந்திரபுத்தியாலும் ஒருபடியை ஆதித்த புத்தியாலும் வெவ்வேறே பெருக்கி ஏறிட்டுநின்ற மூன்றும்படி கலையாம். இந்தக் கலையைச் சுத்த ஆதித்தனிற் சுத்த சந்திரன் பெருத்தாற் சந்திரனிலே வாங்குவது. சிறுத்தாற் கூட்டுவது. ஆதித்தனுக்குப் பெருக்கின கலையை முன்பு சந்திரனிலே கூட்டினால் ஆதித்தனிலுங் கூட்டுவது களைந்தால் ஆதித்தனிலுங் களைவது இப்படி எண்ணிக் கண்டது சமக்கிரகங்கள் என்றுபெயராம்.

இராகுவுக்குப் பரகிதப்படி தற்காலத்துக்குப் புடம் எண்ணிக்கொள்ளுவது. இந்தமட்டும் இரண்டு கிரகணத்துக்கும் ஒக்கும்.

## சூரிய கிரகணம்.

௰௩. சாயன அயன இலக்கினம் எண்ணவகை—சமக்கிரகாதித்தனை வைத்து அயனசலனங் கூட்டி அதிலிருந்த இராசியை மேலேவைத்துக் கீழ்நின்ற பாகை கலையை ௩0. பாகையிலே களைந்து, நின்றதை மேலேவைத்த இராசி எத்தனையென்று கண்டு அத்தனையாம் இராசி வாக்கியத்துக்குப் பிந்தினவாக்கியத்தைத் தண்டாகாரமாக வைத்துப் பெருக்கிக் கீழ்ப்படியை ௬0.ஆல் ஏறிட்டு வாங்கிப்போட்டு, இரண்டாம்படி ௩0.ஆல் ஏறிட்டிருக்க, வேறு பறுவாந்தநாடி விநாடியை வைத்து, ௬. ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ௬0.ஆல் ஏறிட்டு வாங்கி, மேற்படி ௩0.ஆல் ஏற்றி இதில் முந்தப் பெருக்கி வைத்த தோகையை எடுத்துப்போட்டு, நின்றதிலே முன்பு மேலே வைத்திருந்த இராசிக்குப் பிந்தின இராசிவாக்கிய முதலாக எடுக்கப்போந்த வாக்கியங்களை எடுத்து, எடுத்த வாக்கியத்துக்கு ஒவ்வொரு அலகு மேலேவைத்த இராசியுடனே கூட்டுவது. இராசி மிகுந்தால் மண்டலங் களைந்துகொள்ளுக. இராசி வாக்கியம் எடுக்கத்தக்கது எடுத்துப் பின்பு எடுபடாதவிடத்து, மேல்நின்ற சேடத்தை ௩0.ஆல் பெருக்கி எடுபடாத வாக்கியத்துக்கீந்து பெற்ற பலம் பாகையாம். சேடத்தை ௬0.ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலங் கலையாம். இந்தப் பாகை கலையை முந்தின இராசியின்கீழே வைத்துக் கண்டது சாயன அயன இலக்கினமாம்.

### விசேடவுரை.

*இந்த வாக்கியங்கள் அந்தந்த இராசிக்கு உதயாந்த விநாடியாம். எடுபடாத வாக்கியத்துக்கு ௩0. பாகையானால் நின்ற பாகை கலைக்கு எத்தனையென்று திரைராசிக முறையாய்க் கணிக்கவேண்டியபடியால் மேல்நின்ற சேடத்தை ௩0.ஆற் பெருக்கி, எடுபடாதவாக்கியத்துக்கீவது.*

### இராசி வாக்கியம்.

| | |
|---|---|
| க. வீறுகாண் | எ. காரோலி |
| உ. போவேனுன் | அ. சேடனில் |
| ௩. புடவி | ௯. பற்றிலி |
| ௪. பத்தினி | ௰. தறளீ |
| ரு. வேடன்வில் | ௰க. போகேனுன் |
| ௬. பாரோலி | ௰உ. வீடுகாண் |

யச. வேறு, சாயன அயன இலக்கினத்திலே ௩. இராசிவாங்கி நின்றது கோபோனலக்கினமாம். சாயன அயன இலக்கினத்திலே அயனசலனம் வாங்கி நின்றது இட்டலக்கினமாம்.

யரு. "வில்லோடேன்" என்ற வாக்கியம் சர்ப்பாகாரம் அக்கர விக்கேபமாம். இது எப்போதுந் தனம் என்று காண்க.

யசா. வேறு, கோபோனலக்கினத்தை வைத்து மேடாதி உத்தரம் இருணம் என்றுந் துலாதித்க்கணந் தனம் என்றும் அறிந்து, புசாகோடிகோண்டு, புசையாக்கி இதில் இராசியிருந்தாலும் பாகையாக்கிப் பாகையை கரு.க்கீந்து பெற்றபலம் எத்தனையோ அத்தனையாம் ஞாண்வாக்கியத்தை மேலேவைத்து அதற்கு முந்தின வாக்கியங்களையும் அதிலே கூட்டி இதிருக்க, அந்த ஞாண்வாக்கியத்துக்குப் பிந்தின வாக்கியத்திலே கரு.க்கீந்து, நின்றசேடமாகிய பாகை கலைகளைப் பெருக்கிக் கீழ்ப்படியை ஏறிட்டு, மேற்படியை கரு.க்கீந்து பெற்றபலத்தை மேல்வாக்கியத்திற் கலையிலே கூட்டுவது. நின்றசேடத்தை சூ0. ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ஏறிட்டு,மேற்படியை முன்போல், கரு.க்கீந்து பெற்றபலத்தை முன்கூட்டி வைத்ததின் கீழே விகலையிலே கூட்டுவது. இப்படிக் கூட்டிக்கண்டது கலை விகலை ஞாணும். ஞாண்வாக்கியம் இரண்டுபடிவந்தாற் கலை விகலையாம். ஒருபடி வந்தால் விகலையாம். இதுகண்டு ஞாண்வாக்கியமெல்லாம் கூட்டுதல் பெருக்குதல் செய்வது. பாகை கரு.க்கீயப் போதாவிட்டால் முதல் வாக்கியத்தாலே பாகை கலையைப் பெருக்கி, முன்போல் ஈந்து கண்டது ஞாணும். இந்த ஞாணை சூ0.ஆற் பெருக்கினது வில்லாம்.

*விசேடவுரை.*

*புசையிற் பதினைந்து பதினைந்து பாகைக்குச் சந்திர விக்கேபத்தில் ஏறிய கலை விகலைகளை சூ.ஆல் அரிக்க விநாடியுந் தற்பரையுமாம். இந்த விநாடியுந் தற்பரையும் ஞாண் எனப்படும். ஞாவை சூ. ஆற் பெருக்க வில்லெனவே விநாடியையுந் தற்பரையையுங் கலை விகலையாக்கினதென்றறிக.*

**ஞாண் வாக்கியம்.**

க. நடம்.
உ. சோதிபோதம்.
௩. வைத்தோம்.

ச. செல்லோ.
ரு. வீரே.
சு. ஓதிடவோ.

௰எ. இதைப் பதின்மூன்றிலீந்து பெற்றபலத்தை மேலே வைத்து, சேடத்தை சூ0.ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்ற பலத்தைக் கீழேவைத்துக் கண்டது சித்திலுத்தையாம். இதற்குமுந்தின கோபோனலக்கினப்படி தனம் இருணம் அறிந்து கோள்வது. இந்தச் சித்திலுத்தையும் அக்கரவிக்கேபமும் ஒன்று தனம் ஒன்று இருணமானுற் பெரியதிற் சிறியதைக் கழிவது. இரண்டும் ஒன்ருகிற் கூட்டுவது. இப்படிக் கூட்டுதல் கழிதல் செய்துநின்றது கதித்சதின் தனம் இருணப்படி நதியேன்று பெயராம்.

விசேடவுரை.

*சந்திர விக்கேபத்திற் பதின்மூன்றிலொருபங்கு சித்திலுத்தையாம். அதனுல் வில்வல கரு.இல் ஈவது.*

௰அ. வேறு, சமரவியையுங் கோபோனலக்கினத்தையும் பெரியதிற் சிறியது கழிந்து நின்றதைப் புசாகோடிகோண்டு புசையாக்கி, இராசியையும் பாகையாக்கி பாகையை சூ.க்கீந்து, பெற்றபலம் எத்தனையோ அத்தனையாம் இலம்பன வாக்கியத்தையும் அதற்குப்பிந்தின வாக்கியத்தையும் அந்தரித்துச் சேடங்கோண்டு முன்னம் சூ.க்கீந்து நின்ற பாகை கலையைப் பெருக்கிக் கீழ்ப்படியை ஏறிட்டு, மேற்படியை ஆறுக்கீந்து பெற்றபலத்தை முந்தின வாக்கியஞ் சிறத்துப் பிந்தின வாக்கியம்பெருத்தால் முந்தின வாக்கியத்திலே கூட்டுவது. பிந்தின வாக்கியஞ் சிறுத்தால் பெற்றபலத்தை முந்தின வாக்கியத்திலே கழிவது. இப்படிக் கூட்டுதல் கழிதல் செய்து நின்றது இலம்பன விநாடியாம்.

விசேடவுரை.

*ஒவ்வொரு நாழிகைக்கு ஒவ்வொரு இலம்பனவாக்கியம் இருப்பதால், பாகையை நாழிகையாக்கும்படி, சூ க்கீவது. ஆறுபாகைக்கு அந்தர விநாடியேயானுல் நின்ற பாகை கலைக்கு எத்தனை விநாடி என்றறிய வேண்டியபடியாற் பின்னும் சூ.க்கீவது.*

௰கூ. பாகை சூ.க்கீயப் போதாவிட்டால் முதல்வாக்கியத்தாலே பாகை கலைகளைப் பெருக்கிக் கீழ்ப்படி ஏறி

ட்டு மேற்படியை ௬.க்கீந்து பெற்றதுதானே இலம்பன விநாடியாம். இந்த இலம்பன விநாடியை ௬0.இல் ஏறிட்டு நாடி விநாடிகாண்க.

உ௰. வேறு, நதியை வைத்து மேற்படியிற் கஉ. எடுக்கவில்லையாகில் இலம்பன விநாடிதானே புடலம்பன விநாடியாம். கஉ. எடுக்கத்தக்கதாயிருந்தால், உ.ஆற் பெருக்குவது; உச. எடுக்கத்தக்கதாயிருந்தால், ௪.ஆற் பெருக்குவது; ௩௬. எடுக்கத்தக்கதாயிருந்தால், க௪.ஆற் பெருக்குவது. இப்படி இருந்ததுக்குத்தக்கது பெருக்கிக் கீழ்ப்படியை ௬0 இல் ஏறிட்டு, வாங்கி நின்ற மேற்படியை இலம்பன விநாடியாலே பெருக்கி அதை முன்பு உ.ஆற் பெருக்கினுற், கஉ.க்கு ஈவது; ௪.ஆற் பெருக்கினல், உச க்கீவது; க௪.ஆற் பெருக்கினல், ௩௬.க்கீவது. இப்படி ஈந்து பெற்றபலத்தை இலம்பன விநாடியிலே வாங்கப் புடலம்பன விநாடியாம்.

விசேடவுரை.

*முன்கண்ட இலம்பன விநாடியைச் சுத்தம்பண்ணும்படி இப்படிப் பெருக்கி அரிப்பது. நதி கஉ. கலைக்குக் குறைந்தால் இலம்பன சுத்தம் அவசியமன்றென்றறிக.*

உக. இந்தப் புடலம்பனத்தை ஏறிட்டுப் பறுவாந்தநாடி விநாடியிலே பகல் பிற்கூறுனுற் கூட்டி, முற்கூறுனுற் களைவது. நடுக்கூறுனுற் பாதிசெய்து கூட்டுவது. இராத்திரிக்கும் இந்தப்படி கூட்டுதல் களைதல் செய்க. இப்படிச்செய்து நின்றது இலம்பன பறுவாந்தநாடி விநாடியாம்.

உஉ. வேறு, புடலம்பனத்தைச் சந்திரபுத்தியாலே பெருக்கிக் கீழ்ப்படி ௬0.இல் ஏறிட்டு, வாங்கிநின்ற ௩.ம்படி கலையாம். இதை முன்பு பறுவாந்த நாடியிலே புடலம்பனங் கூட்டுதல் களைதல் செய்தபடியே சமரவியிலே கூட்டுதல் களைதல் செய்க. இப்படிச் செய்துநின்றது இலம்பன சந்திரனும்.

உ௩. இதிலே இராகுப்புடத்தைக் களைந்து களையப் போதாவிட்டால் மண்டலங்கூட்டிக் களைந்துநின்றதிலே மேடாதி உத்தரம் இருணம் என்றும், துலாதி தக்கணந் தனம் என்றும் அறிந்து புசையாக்கி, இருந்த இராசியையும் பாகையாக்கி, கரு.க்கீந்து முன்புசொன்ன ஞாண்வாக்கியங்கண்டு எண்ணினது ஞாணும். இதை ௬.இற் பெ

ருக்கினது வில்லாம். இந்த வில்லை இருபடிசெய்து ஒரு படியை உக.க்கீந்து, சேடத்தை சூ0.ஆற் பெருக்கிக் கீழே கூட்டி முற்கருவிக்கீந்து பெற்றபலங் கலை விகலையாம். இதை மற்றப்படியிலே கூட்டிக்கண்டது முன்கண்ட தனம் இருணப்படி இலம்பன சந்திர விக்கேபமாம்.

விசேடவுரை.

*ஞாண்வாக்கியத்தில் எடுத்துக்கொண்ட சந்திரபாமாபமம் குறைவுபட்டிருந்தபடியால், வில்லில் இருபத்தொன்றில் ஒருபங்கை வில்லுக்குக் கூட்டிச் சந்திரவிக்கேபங் காண்பது.*

உச. இந்த விக்கேபமும் நதியும் ஒன்று தனம் ஒன்று இருணமானாற் பெரியதிற் சிறியது களைந்தும் இரண்டும் ஒன்றானாற் கூட்டியும் நின்றது சுத்தபுடநதி என்று பெயராம்.

உரு. வேறு, சந்திரபுத்தியை வைத்து உரு.க்கீந்து பெற்றபலம் மேலேவைத்து, சேடம் சூ0.ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து பெற்றபலங் கீழேவைத்துக் கண்டது சந்திர மண்டலமாம்.

விசேடவுரை.

*சந்திரமண்டலஞ் சந்திரபுடபுத்தியில் உரு இல் ஒருபங்கானபடியால் உரு.க்கீவது.*

உசு. ஆதித்த புத்தியை ரு.ஆற் பெருக்கி, கூ.க்கீந்து பெற்றபலம் மேலேவைத்துச் சேடம் சூ0.ஆற் பெருக்கி, முற்கருவிக்கீந்து பெற்றபலங் கீழேவைத்துக் கண்டது ஆதித்த மண்டலமாம்.

விசேடவுரை.

*ஆதித்தமண்டலம் ஆதித்த புடபுத்தியில் கூ.இல், ரு. பங்கானபடியால் ஐந்தாற் பெருக்கி ஒன்பதால் அரிப்பது.*

உஎ. இவ்விரு மண்டலமும் ஒன்றாய்க்கூட்டிப் பாதி செய்தது சையோகதேலமாம். இந்தச் சையோகதேலத்திலே சுத்தபுட நதியைக் களையவில்லையாகிற் கிரகணமில்லை. களையவுண்டாகிற் கிரகணமுண்டு. களைந்து நின்றது கிரசாங்குலமாம்.

உஅ. வேறு, சையோகதேலத்தை வைத்துத் தன்னைத்தன்னாலே பெருக்கி, கீழ்ப்படி சூ0.இல் ஏறிட்டு, நின்

றது சையோகதேல வர்க்கமாம்.

வேறு, சுத்தபுடநதியையும் வைத்துத் தன்னைத்தன் ஞலே பெருக்கி முன்புபோல ஏறிட்டுக் கண்டது நதிவர்க்கமாம்.

இதை முந்தின சையோகதேல வர்க்கத்திலே எடுத்துப்போட்டு நின்றதை மூலங்கோள்ளவென்றும் வர்க்கங்கோள்ளவென்றும் சொல்லலாம். மூலங்கோள்ளும்படி ஒற்றித்த தானம் வர்க்கம் என்றும் இரட்டித்த தானம் அவர்க்கம் என்றும் கண்டு இரட்டித்த தானத்தைவிட்டு ஒற்றித்த தானத்திலே ஒன்றுக்கு ஒரோன்று ஒன்று, இரண்டுக்குஈரிரண்டு நான்கு,மூன்றுக்கு மும்மூன்றுஒன்பது, நாலுக்கு நாநான்கு பதினாறு, என்று இந்தப்படியே வர்க்கவிலக்கத்தை எடுத்து மூலத்தை இரட்டித்துக்கீழே வைத்து மேலே வர்க்கங்கோண்டு நின்ற சேடத்தோடு அடுத்த அவர்க்கத் தானத்தை இதற்கீந்து பெற்றபலத்தை முன்னீவுக்கு இணையாக வைத்து ஈவுமுற்றையும் வர்க்கித்து முன்போல் எடுத்து, இப்படியே மூலங்கோள்ளுவது.

விசேடவுரை.

ஒரு சாத்திய தீர்புசத்திலே சையோகதேலங் கன்னமாகவும் புடநதி அதன்புயத்தோன்ருகவும் இருப்பதால் மற்றப்புயம் அறியும்படி சையோகதேல வர்க்கத்திலே புடநதி வர்க்கத்தை எடுத்து மூலங் கண்டது.

உகூ. மூலத்தை ஒரு நாடிக்குள்ள அந்தரபுத்திக்கீந்து பெற்றபலம் நாடியாம். சேடத்தை சுo.ஆற் பெருக்கி, முற்கருவிக்கீந்தது விநாடியாம். இது திதி அர்த்தம். இதை இலம்பன பறுவாந்தநாடியிலே கழியப் பரிசகாலமாம். இலம்பன பறுவாந்தந்தானே மத்தியகாலமாம். இந்தப் பிரகாரம் சூரிய கிரகணம் எண்ணிக்கோள்வது.

சந்திர கிரகணம்.

ஙய. சமக்கிரக இராகுப்புடம் அளவும் முன்புசொன்னபடியே எண்ணிப் பின்பு சந்திரபுத்தியைவைத்து,உரு.க்கீந்து பெற்றது அங்குலம். சேடம் சுo.ஆற் பெருக்கி, முற்கருவிக்கீந்து பெற்றது வியங்குலம். இந்த அங்குல வியங்குலஞ் சந்திரமண்டலமாம்.

ஙக. சந்திரமண்டலத்தை வைத்து, ரு.ஆற் பெருக்கி

ப் பாதியாக்கி அதில் ஒரு அங்குலங்கூட்டிக் கண்டது இராகு மண்டலமாம்.

௩௨. வேறு, சமசந்திரனை வைத்து இராகுப்புடத்தைக் களைந்து களையப்போதாவிட்டால் மண்டலங்கூட்டிக் களைந்து நின்றசேடம் மேடாதி உத்தரந் துலாதி தக்கணம் என்று கண்டு புசைசெய்து நின்ற இராசியைப் பாகையாக்கிப் பாகையைப் பதினைந்துக்கீந்து பெற்றபலம் எத்தனையோ அத்தனையாம் ஞாண்வாக்கியத்தையும் அதற்கு முந்தின வாக்கியங்களையும் ஒன்றாய்க்கூட்டி மேலே வைத்து பிந்தின வாக்கியத்தாலே நடுநின்ற பாகை கலைகளைப் பெருக்கிக் கீழ்ப்படியேற்றி, மேற்படியை கடு. க்கீந்து பெற்றபலத்தை மேலேவைத்திருந்த கலையிலே கூட்டி சேடத்தை கூ0.ஆற் பெருக்கி, முற்கருவிச்சீந்து பெற்றபலம் கீழே விகலையிலே கூட்டிக் கண்டது ஞாணம்.

௩௩. இந்த ஞாணை கூ.ஆற் பெருக்கினது வில்லாம். இதை இருபடி வைத்து ஒருபடியை உக.க்கீந்து மேலே வைத்து சேடம் கூ0.ஆற் பெருக்கி ஈந்து கீழேவைத்து இதனை மற்றப்படியிலே கூட்டி நின்றது முன்கண்ட திக்கின்படி சந்திரவிக்கேபமாம்.

௩௪. வேறு, சந்திரமண்டலத்தையும் இராகுமண்டலத்தையுங் கூட்டிப் பாதியாக்கி நின்றது சையோகதேலமாம். இதிலே முந்தின விக்கேபத்தை வாங்கிநின்ற சேடம் கிருசாங்குலமாம். வாங்கப் போதாவிடிற் கிரகணமில்லை.

௩௫. வேறு, சையோக தேலத்தை வைத்துத் தன்னைத்தன்னாலே பெருக்கிக் கீழ்ப்படி கூ0.ஆல் ஏறிட்டு, நின்றது சையோகதேல வர்க்கமாம். சந்திர விக்கேபத்தைத் தன்னைத்தன்னாலே பெருக்கிக் கீழ்ப்படி ஏறிட்டு நின்றது விக்கேப வர்க்கமாம். இதைச் சையோகதேல வர்க்கத்தில் எடுத்துப்போட்டு நின்றசேடத்தில் மூலங்கொள்ள வகை. மேற்படி ஏகதானம் வர்க்கம் என்றும் இரண்டாந்தானம் அவர்க்கம் என்றும் மூன்றாந்தானம் வர்க்கம் என்றும் நாலாந்தானம் அவர்க்கம் என்றும் இப்படியே கண்டு அவர்க்க தானத்தில் எடாமல் வர்க்கதானத்திலே இருந்த அலகு ஒன்றுக்கு ஒரோன்று ஒன்று, இரண்டுக்கு ஈரிரண்டுநான்கு,மூன்றுக்கு மும்மூன்று ஒன்பது,நாலுக்கு

நாநான்கு பதினறு, என்றிப்படி வர்க்கமூலங்கண்டு மூல த்தை இரட்டித்துக் கீழே வைத்து, மேலே வர்க்கங்கோ ண்டுநின்ற சேடத்தை அடுத்த அவர்க்கத்தானத்தோடே சேர்த்து,முன்னிரட்டித்த மூலத்துக்கீந்துபேற்ற ஈவை மு ந்தின ஈவுக்கிணையாக வைத்து ஈவுமுற்றையும் வர்க்கித் து முன்போல எடுத்து இந்தப் பிரகாரத்திலே மூலங்கோ ள்வது. பேற்ற மூலத்தின்கீழே ஒரு நாடிக்குள்ள அந்தர புத்தியை வைத்து ஈந்துபேற்றபலத்தை மேலேவைத்து, சேடத்தை சூ0.ஆற் பெருக்கி, முற்கருவிக்கீந்து பேற்ற பலத்தைக் கீழேவைத்துக் கண்டது திதியர்த்தநாடி வி நாடியாம். இதைப் பறுவாந்தநாடி விநாடியிலே களைய பரிசகாலமாம். கூட்ட, மோட்சகாலமாம். பறுவாந்தந்தா னே மத்தியகாலமாம். இந்தப் பிரகாரஞ் சந்திரகிரகணம் எண்ணிக்கோள்ளுவது.

சகாப்தம் ௲௭௱௮௰. சென்று செல்லாநின்ற கீலகவருஷம் நாராயண சாஸ்திரியார் குமாரன் விசுவநாத சாஸ்திரியார் செய்த,

# வாக்கிய கரண கிரகணம்.

௧. இராகுகேது நிற்கிற இராசி அறிந்து அந்த் இராசிமாதங்களிலும் அதற்கு முன்பின் இராசிமாதங்களிலும் பகலிலே அமாவாசை அற்றால் சூரியகிரகணம் வருமென்றும் இரவிலே பூரணை அற்றால் சந்திரகிரகணம் வருமென்றுங்கண்டு,

௨. அன்று சூரியோதய வரைக்குக் கலியுகத்திற் சென்ற தினுதி சுத்ததினத்தைவைத்து இதிலே "மாலைதந்தீர் பெண்பெற" என்று களைந்து நின்றசேடத்திற்குச் சோமவாராதி கண்டம் என்று பெயராம்.

விசேட வுரை.

*"மாலைதந்தீர் பெண்பெற" என்று களைந்தது சுத்ததினத்தைச் சுருக்கும்படி. இதினால் துருவங்கட்டியது கிறிஸ்தவருஷம் ௧௮௭௬க்கென்றறியலாம். இது இந்நூல் ஆசிரியருக்குச் சனனவருஷமுமாம்.*

௩. இதின்கீழே "நாள்வெற்றிப்பாணம்" என்றும் "மதிசோதி" என்றும் "தேடீர்வாள்" என்றும்வைத்து அரித்தபலம் நாள்வெற்றிப்பாண பலமும், மதிசோதிபலமும், தேடீர்வாள்பலமுமாம். சேடம் கேதவாக்கியமாம். பின்பு சர்ப்பாகாரமாகச் "சொல்லக்கேளீர் செய்யாளை" என்றுவைத்து நாள்வெற்றிப்பாண பலத்தாற் பெருக்கிக் கீழ்ப்படியிரண்டும் வீகலை கலை ௬0.ஆல் ஏறிட்டு மேற்படி பாகை, ௩0.ஆல் ஏறிட்டு அதின் மேற்படி இராசிமண்டலங் கழிந்து இதிருக்க, "கற்றேன் மதியென்போன்மகன்" என்றுவைத்து மதிசோதிபலத்தாற் பெருக்கி முன்போல் ஏறிட்டு இதுவுமிருக்க, "தூயோன்சீர் சீரேம்மான்" என்றுவைத்து தேடீர்வாள் பலத்தாற் பெருக்கி முன்போல் ஏறிட்டு இதுவுமிருக்க,இந்த மூன்றுதொகையையும் ஒன்றாய்க்கூட்டி ஏறிட்டு நின்றதிலே "வென்றான்வீரன் தண்டோன்றால்" என்ற மூலத்துருவங்கூட்டவிகலாதி சசித்துருவமாம்.

௪. அற்றை வாக்கியமும் மானியாதியுங்கூட்டி நின்றது சந்திரபுடமாம்.

ரு. இதைச் சேனகல சுத்தம்பண்ணும்படி,-மதிசோதிபலத்தை ௮.ஆலும் தேடீர்வாள்பலத்தை ௱௨.ஆலும் பெருக்கித் தேடீர்வாள்பலத்தைப் பெருக்கின தோகையிலே மதிசோதி பலத்தைப் பெருக்கின தோகையை எடுத்து ௬௦.ஆல் ஏறிட்டு நின்றது சேனகல விநாடியாம். பின்பு அற்றைச் சந்திரபுத்தியையும் மத்திமபுத்தியான "சடைப்பெண்" என்னும் வாக்கியத்தையும் பெரியதிற் சிறியதைக்களைந்து நின்றதைச் சேனகல விநாடியினாலே பெருக்கி ஏறிட்டுநின்ற கலை விகலையைச் சந்திரபுத்தி பெருத்தாற் சந்திரபுடத்திலே கூட்டுவது; மத்திமபுத்தி பெருத்தாற் சந்திரபுடத்திலே களைவது. இப்படிச் செய்துநின்றதிலே கீழ்ப்படி விகலையை அர்த்தாதிகங் கொடுத்து நின்றது சுத்த சந்திரபுடமாம். அற்றைவாக்கியத்திற் சந்திரபுத்திதானே சந்திரகதியாம்.

௬. சூரியபுடம் எண்ணும்படி,–சென்றமாதத்தை இராசியாகவும் அற்றையிற் தேதியைப் பாகையாகவும் வைத்து அந்தமாதத்திற் சங்கிரமநாழிகை விநாழிகையைப் பகலானால் கலை விகலைப்படியிலே வாங்கியும் இராத்திரியானாற் சங்கிரமநாழிகை விநாழிகையை ௬௦.இலே களைந்து சேடநாழிகை விநாழிகையைக் கலை விகலைப்படியிலே கூட்டியும் யோக்கியாதியை மீனாதி எ. மாதமுங் களைந்துந் துலாதி ரு. மாதமுங்கூட்டியும் நின்றதில் விகலையை அர்த்தாதிகங்கொடுத்து நின்றது சூரியபுடமாம். அந்தந்த மாதத்துக்குச்சொன்ன அர்க்கபுத்திதானே சூரியகதியாம்.

எ. திதி எண்ணும்படி,—சுத்த சந்திரபுடத்திலே சூரியபுடத்தைக் களைந்து பறுவங்கண்டு நின்றசேடபாகையைக் கலையாக்கிக் கீழேகூட்டி பின்பு ௬௦.ஆல் பெருக்கி நின்றதை ஈந்து, கண்டபலத்தை வைத்துச் சேடத்தை ௬௦.ஆற் பெருக்கி முற்கருவிக்கீந்து கண்டபலத்தைக் கீழேவைத்துக் கண்டது பிரதமநாடி விநாடியாம். இதை ௬௦.நாழிகையிலே களையச் சுத்தபறுவநாடி விநாடியாம்.

அ. இராகுப்புடம் எண்ணும்படி,---முன்புநின்ற கண்டத்தைவைத்து "முல்லைவெண்பூ" என்றதற்கு அரித்துப் பெற்றபலத்தை விருதாப்பலம் என்றுதள்ளி நின்றசேடத்தை கஉ.ஆலும் ௱௦.ஆலும் ௬௦.ஆலும் பெருக்

கி முற்கருவிக்கீந்து பெற்றபலம் இராசி பாகை கலையாம். இதிருக்க, பின்புங் கண்டத்தைவைத்துச் "சிவன்றோர்" என்ற பகனத்துக்கு அரித்துப் பெற்றபலம், கலையாம். இதை ஏறிட்டுக் கண்டதை முன்வைத்தபடியிலே கூட்டி இதிலே "முன்னீர்பேதமேண்" என்ற மூலத்துருவமுங் கூட்டிக் கண்டதை இராசி கஉ.இற் கழிந்து நின்றது இராகுப் புடமாம். பறுவநாடி விநாடியைவைத்து விநாடியை அர்த்தாதிகங் கோடுத்துத் தள்ளிப்போட்டு மேனின்றநாடியை கசு.ஆல் ஈந்த பலம் கலையாம். இதை இராகுப்புடத்திலே கழியத் தற்கால இராகுப்புடமாம்.

விசேடவுரை.

"முல்லைவெண்பூ" என்பது முன் பரகிதத்திற் காட்டியபடி இராகுவின் மண்டலகாலமாம். இப்படி மண்டலங்கோண்டு கணக்குப்பண்ணினால், அகங. தினத்துக்கு ஒரு கலை விலகுமாகையாற் கண்டதை அகங.இல் ஈவது. கசு.நாடிக்கு ஒருகலை இராகுகதியாமாதலால், உதயாதி பறுவாந்தநாடியை கசு.இல் ஈவது.

கூ. அயனபுடம் எண்ணும்படி,--கலியப்தத்தைவைத்து "முதனூல்" என்றதற்கு அரித்துப் பெற்றபலம் இராசியாம். சேடத்தை ங0.ஆலும் சு0.ஆலும் பெருக்கி ஈந்தபலம் பாகை கலையாம். இதைப் புசாகோடிகோண்டு பரகிதக் கிரமமாக யுத்தநாதிச் சாவாக்கியத்தினால் சாபலங்கண்டு கண்டசாபல கலையை ஏற்றிக்கண்டது அயனபுடமாம்.

யுத்தநாதி வாக்கியம்.

| | |
|---|---|
| க. மறை | கங. மேலூர்கோண்டல் |
| உ. மாவேதம் | கச. மையார்கடல் |
| ங. சீரேன்முன் | கரு. முன்னேகடல் |
| ச. வாதூதி | கசு. வேணியாளன் |
| ரு. போதுசீர் | கஎ. வீணேகாலம் |
| சு. வெளிப்பு | கஅ. சீதாரிகள் |
| எ. தந்தார்நூல் | ககூ. கைக்கும்விடம் |
| அ, விண்ணோர்பேண | உ0. மேலேசிவம் |
| கூ. விண்ணேசெல் | உக. போதவீரம் |
| க0. கைக்குவேல் | உஉ. கூருர்வீரம் |
| கக. சிவிகை | உங. கூலிவீதம் |
| கஉ. மாலோகோண்டல் | உச. போனீழம் |

விசேடவுரை.

*அயனபுடம் அறியும்படி இங்ஙனங்கூறிய விதிக்காதாரம் முன்னர் சூரியசித்தாந்தத்திற் கூறியபடி, பிராக்சக்கரத்தில் அயனஞ்சலனம்ப ண்ணுகின்றதென்று கொண்டுகொண்ட கோட்பாடாம். இந்தப் பிரா க்சக்கரத்தின் மையம் மேஷாரம்பத்தில் இருக்கின்றது. இதின் ஒரு மண்டலகாலம் எ௲அ0. வருடம். ஒரு இராசிக்கு ௬௱௫. வருடமா க மூன்றிராசிக்கு ௧௮௱௫. வருடமாம். இதற்குக்கூடிய அயனசலனம் உச. பாகையென்று இந்த யுத்தநாதி வாக்கியத்திலே காணலாம். சூ ரியசித்தாந்தத்திற்போல் இந்நூலிலுங் கலியுகாரம்பத்துக்கு அயனசல னமில்லை என்று கொள்ளப்பட்டது. ஆயினும் பிராக்சக்கரத்து மண் டலகாலம் இந்நூலில் நீடித்ததாகக் கூறியிருக்கின்றது. அயனகதியுங் காலத்துக்குத்தக்க பிரமாணங் கொண்டிருக்கவில்லை. ஆகவே அய னபுடமும் மூலத்துருவங்கட்டிய காலமளவிலன்றி அதற்கு முன்னும் பின்னும் பிசகுபட்டு வருகின்றது. கண்டத்தைக் கொண்டு துருவங்கட் டிய காலம் இன்னதென்று முன்னிதானித்திருப்பது சரிதானென்பதற் கு இவ்விதமாய் வாக்கியம் பிசகுபடுவதும்ஓர்சாட்சியென்றறியலாம்.*

௰. திவாமானம் எண்ணும்படி,—சூரியபுடத்தை வை த்து அயனபுடங்கூட்டி நின்றதிலே மேடாதிதுலாதி அறி ந்து புசாகோடிகொண்டு கோடியுற்றாலும் புசையாக்கி நி ன்றபுசையில் இராசி இல்லாமற் பாகை கலை நின்றால் ௬௯.ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ௬0.ஆலும் மேற்படி ௩0. ஆலும் ஏறிட்டுக் கீழிருபடியும் வாங்கிப்போட்டு மேல்நி ன்றது சரவிநாடியாம். இராசி க.இருந்தால் இராசியை எடுத்துப்போட்டுப் பாகை கலையை ௩௯.ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ௬0.ஆலும் மேற்படி ௩0.ஆலும் ஏறிட்டுக் கீழ் ப்படியைவாங்கிப்போட்டு மேனின்ற விநாடியிலே ௬௯. க்கூட்டி ௬0.ஆல் ஏறிடச் சரநாடி விநாடியாம். இராசி உ. இருந்தால் இராசியை எடுத்துப்போட்டுப் பாகை கலை யை க௬.ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ௬0.ஆலும் மேற்படி ௩0.ஆலும் ஏறிட்டுக் கீழிருபடியும் வாங்கிப்போட்டு மே னின்ற விநாடியிலே ௲௬.கூட்டி ௬0.ஆல் ஏறிடச் சரநாடி விநாடியாம்.

௰க. வேறே ௩0. நாழிகையைவைத்து முன்புகண்ட து மேடாதியாகிற் சரநாடி விநாடியைக் கூட்டியும் துலா தியாகிற் கழித்தும் நின்றது திவாமானமாம்.

௰உ. சமக்கிரகம் எண்ணும்படி,—சரவிநாடியை இ ருபடியாக வைத்து ஒருபடியைச் சூரியகதியிலும் ஒருப டியைச் சந்திரகதியிலும் வெவ்வேறே பெருக்கிக் கீழிரு படியும் ௬0.ஆல் ஏறிட்டு வாங்கிப்போட்டு மேனின்ற க லை பாகையைச் சூரியகதியினாலே பெருக்கினாற் சூரிய பு

டத்திலும், சந்திரகதியினாலே பெருக்கினாற் சுத்தசந்திரபு டத்திலுங் கழியச் சமக்கிரகங்களாம். இவ்வளவும் இரண்டுகிரகணத்துக்கும் போது.

சூரிய கிரகணம்.

௰௩. திவாமானத்தை அர்த்திக்கத் திவார்த்தமாம். சுத்தபருவத்தையுந் திவார்த்தத்தையும் வைத்துப் பெரியதிற் சிறியதைக்கழிந்து நின்றது பருவ திவார்த்தநாடி விவரம் என்று பெயராம். இதில் நாழிகை எத்தனையென்று கண்டு நாழிகையை எடுத்து அத்தனையாம் இலம்பிதசாவாக்கியத்தை விநாழிகைக்கு மேலாகவைத்துப் பின்னின்ற சாவாக்கியத்தைக் கீழேவைத்து இதிலே மேற்சாவாக்கியத்தைக் கழிந்து நின்றசேடத்தால் நடுநின்ற விநாடியைப் பெருக்கி ௬௰.ஆல் அரித்துப் பெற்றபலத்தை மேற்சாவிலேகூட்டி அதை ௬௰.ஆல் ஏறிட்ட நாடி விநாடியாம். இது இலம்பன நாடி விநாடியாம். இப்படி எண்ணிக் கண்ட இலம்பனநாடி விநாடியைப் பருவாந்தம் பூருவான்னமாகிற் சுத்தபருவத்திலே கழிந்தும் அபரான்னமாகிற் கூட்டியும் நின்றது இலம்பன பருவமாம்.

௰௪. இலம்பனநாடி விநாடியைவைத்து விநாடியை அர்த்தாதிகங்கொடுத்துத் தள்ளிப்போட்டு மேனின்ற நாடியைச் சமக்கிரகத்தின் கலையிலே பருவம் பூருவான்னமாகில் வாங்கியும் அபரான்னமாகிற் கூட்டியும் நின்றது இலம்பன பருவாந்த ரவியாம்.

௰௫. வேறே, திவார்த்தத்தையும் இலம்பன பருவத்தையும் வைத்துப் பெரியதிற் சிறியதைக்கழிந்து நின்றதை ௬.ஆற் பெருக்கிக் கீழ்ப்படி ௬௰.ஆலும் மேற்படி ௬௰.ஆலும் ஏறிட்டு நின்ற இராசி பாகை கலையை இலம்பன பருவாந்த ரவியிலே பருவம் பூருவான்னமாகிற் கழிந்தும் அபரான்னமாகிற் கூட்டியும் நின்றதிலே அயனபுடமுங் கூட்டச் சாயனரவியாம்.

௰௬. இதிலே மேடாதி உத்தரம் துலாதி தக்கணம் என்றுகண்டு புசாகோடிகொண்டு கோடியுற்றாலும் புசை பிறப்பித்துப் புசை இராசி ஒன்றுக்கு ௩. சாவாகக்கொண்டு பின்புநின்ற புசா பாகை கலையிலே சுபாங்காதி வாக்கியத்தால் முன்றேமுக்காற்பாகைக்கு ஒருசாவாகக்கழிந்து நின்றபாகையைக் கலையாக்கிக் கீழேகூட்டி எடுபட்ட ஆதித்த சாவாக்கியத்தைக் கலைக்கு மேலாக வைத்து

ப் பின்னின்ற சாவாக்கியத்தைக் கலைக்குக்கீழாக வைத்துக் கீழ்ச்சாவிலே மேற்சாவைக் களைந்து நின்றசேடத்தால் நடுநின்ற கலையைப் பெருக்கி நின்றதைக் "குன்றுதான்" என்றதற்கு அரித்துப் பெற்றபலத்தை மேற்சாவாக்கியத்திலே கூட்டுவது. இப்படிச் செய்துநின்றது தண்டாகாரமாம். இதை ஏழுக்கு அரித்துப் பெற்றபலம் அங்குலமாம். சேடம் கூ0.ஆற் பெருக்கி எ.க்கீய வியங்குலமாம். இது சாயனரவி உத்தரமாகில் உத்தர இரவி விக்கேபம் என்றும் தக்கணமாகில் தக்கண இரவி விக்கேபம் என்றும் அறிவது.

யஎ. இலம்பனநாடி விநாடியைவைத்து கஙு.ஆற் பெருக்கிக் கீழோருபடி கூ0.ஆல் ஏறிட்டு வாங்கிப்போட்டு மேனின்ற கலையைப் பறுவாந்தம் பூருவான்னமாகிற் சமக்கிரகத்திலே களைந்தும் அபரான்னமாகிற் கூட்டியும் நின்றது இலம்பன சமசந்திரனும்,

யஅ. இதிலே தற்கால இராகுப்புடத்தைக் களைந்து களையப் போதாதாகில் இராசிமண்டலங் கூட்டிக் களைந்து மேடாதி துலாதி அறிந்து மேடாதி உத்தரம் துலாதிதக்கணம் என்று கண்டு புசாகோடிகொண்டு கோடியுற்றலும் புசைபிறப்பித்து நின்ற புசாபாகையைக் கலையாக்கிக் கீழேகூட்டி நின்றதை கஙு.க்கு அரித்துப் பெற்றபலம் அங்குலமாம். சேடத்தை கூ0.ஆற் பெருக்கி முற்கருவிக்கு அரித்துப் பெற்றபலம் வியங்குலமாம். இது உத்தரமாகில் உத்தரசந்திர விக்கேபம் என்றும் தக்கணமாகில் தக்கணசந்திர விக்கேபம் என்றும் அறிவது.

யகூ. "பொன்னேவேல்" என்ற சர்ப்பாகாரமான வாக்கியந்தானே நித்திய தக்கண விக்கேபமாம்.

உய. இந்த மூன்று விக்கேபத்தையும் வெவ்வேறே வைத்து ஏகதிக்கானதைஒன்றாய்க்கூட்டிப் பின்னதிக்கானதை வேறேவைத்துப் பெரியதிற் சிறியதைக் களைந்து நின்றது அதிகவசத்தாற் புடவிக்கேபம் என்றுபெயராம்,

உக. சூரியகதியை வைத்து ௫.ஆற் பெருக்கி கஅ.க்கீந்து பெற்றபலம் அங்குலமாம். சேடத்தை கூ0.ஆற் பெருக்கி முற்கருவிக்கு அரித்துப் பெற்றபலம் வியங்குலமாம். இது இரவி மண்டலார்த்தமாம்.

*விசேடவுரை.*

*சூரியமண்டலார்த்தஞ் சூரியபுடபுத்தியிற் பதினெட்டில் ஐந்துபுங்*

*கானபடியாற் புடபுத்தியை ரு.ஆற் பெருக்கி கஅ.க்கீவது*

உஉ. சந்திரகதியை வைத்து ருO.க்கு அரித்துப் பெற்ற பலம் அங்குலமாம். சேடம் சூO.ஆற் பெருக்கி முற்கரு விக்கீய வியங்குலமாம். இது சந்திரமண்டலார்த்தமாம்.

விசேடவுரை.

*சந்திரபுடபுத்தியில் ருO.இல் ஒருபங்கு சந்திரமண்டலார்த்தமாமா தலாற் சந்திரபுடபுத்தியை ருO.க்கீவது.*

உரு. இதையும் இரவிமண்டலார்த்தத்தையுங் கூட்டச் சம்பற்கார்த்தமாம். இதிலே புடவிக்கேபங் களைய இல்லையாகிற் கிரகணம் இல்லை. களையலாமாகிற் களைந்துநின்றது புடவிக்கேபத்தின் திசைப்படி கிருசாங்குலமாம்.

உச. இந்த அங்குல வியங்குலத்தை வைத்து அங்குலத்திலே ஒரு அங்குலம் எடுத்து ஒரு நாழிகை மேலே வைப்பது. பின்பு உ. எடுத்து, க; ரு. எடுத்து, க; சூ. எடுத்து, க; அ. எடுத்து, க; கஉ. எடுத்து, க; இப்படிக்கூட்டுவது. இப்படி எடுக்கப்போந்த அளவும் எடுத்து நின்றதை சூO.ஆற் பெருக்கி எடுக்கப்போதாத இலக்கத்துக்கு அரித்துப் பெற்றபலத்தை முன் வைத்த நாடியின்கீழே விநாடியாக வைத்து நின்றது திதிநாடி விநாடியாம். இதை அர்த்திக்கத் திதியர்த்தமாம்

உரு. இலம்பன பறுவத்தை ரு. படிவைத்து ஒருபடியிலே திதியர்த்தங் களையப் பரிசகாலமாம். ஒருபடி இலம்பன பறுவந்தானே மத்தியகாலமாம். ஒருபடியிலே திதியர்த்தங்கூட்ட மோட்சகாலமாம்.

உசூ. இரவி மண்டலார்த்தத்தை இரட்டிக்க இரவிமண்டலமாம். இரவிமண்டலத்துக்குக் கிருசாங்குலம் எவ்வளவோ அவ்வளவு கிரகணமாம். அரைக்கால், கால், அரை, முக்காற் கிரகணம் வந்து உத்தர கிருசாங்குலமாகில் வாயுவிற் பரிசம் ஈசனில் மோசனம் என்றும், தக்கண கிருசாங்குலமாகில் நிருதியிற் பரிசம் அக்கினியில் மோசனம் என்றும், முழுக்கிரகணமாகில் மேற்கேபரிசம் கிழக்கே மோசனம் என்றும் அறிவது. இப்படிச் சூரியகிரகணம் எண்ணிக்கொள்வது.

சந்திர கிரகணம்.

உஎ. சந்திரனைவைத்துத் தற்கால இராகுப்புடத்தைக் களைந்து களையப்போதாதாகில் இராசிமண்டலங்கூட்டிக்

க்ளைந்துநின்றது பாதூனசந்திரன் என்று பெயராம். இதி லே மேடாதி துலாதி அறிந்து புசாகோடிகொண்டு புசை யாக்கி நின்றபாகையைக் கலீகரித்துக் கீழேகூட்டி நின்ற கலையை கஙூ.க்கு அரித்தபலம் அங்குலமாம். சேடத்தை கூ0.ஆற்பெருக்கி முற்கருவிக்கு அரித்தபலம் வியங்குல மாம். இந்த அங்குல வியங்குலங்கள் முன்புகண்ட பா தூனசந்திரன் மேடாதியாகில் உத்தர சந்திரவிக்கேபம் என்றும் துலாதியாகில் தக்கண சந்திர விக்கேபம் என்று ம்பெயராம்.

உ௯. சந்திரகதியை வைத்து ரு0.ஆல் அரித்துப் பெற் றபலம் அங்குலமாம். சேடத்தை கூ0.ஆற் பெருக்கி மு ற்கருவிக்கு அரித்துப் பெற்றபலம் வியங்குலமாம். இது சந்திரமண்டலார்த்தமாம்.

உக. சந்திரமண்டலார்த்தத்தை ரு.ஆற் பெருக்கி அர்த் திக்க இராகுமண்டலார்த்தமாம்.

ஙூ0. சந்திர மண்டலார்த்தத்தையும் இராகுமண்டலா ர்த்தத்தையுங்கூட்டி நின்றது சமபற்கார்த்தமாம். இதிலே சந்திரவிக்கேபங்களைய இல்லாதிருக்கிற் கிரகணமில்லை. களையலாமாகிற் களைந்துநின்றது கிரசாங்குலமாம். சந்தி ரவிக்கேபம் உத்தரமாகில் தக்கண கிரசாங்குலம் என் றும், விக்கேபம் தக்கணமாகில் உத்தரகிரசாங்குலம் எ ன்றும், அறிவது.

ஙூக. இந்தக் கிரசாங்குல வியங்குலத்தை வைத்து அங்குலத்திலே ஒன்று எடுத்து மேலே ஒன்று வைப்பது. பின்பு க. எடுத்து, க; உ. எடுத்து, க; ஙூ. எடுத்து, க; ச. எடுத்து, க; பின்பும் ச. எடுத்து, க; கூ. எடுத்து, க; எ. எ டுத்து, க; கக. எடுத்து, க; கஙூ. எடுத்து, க; இப்படிக் கூ ட்டுவது. பின்பு எடுக்கப்போந்தவும் எடுத்து நின்றசே டத்தை கலீகரித்துக் கீழேகூட்டி எடுக்கப்போதாத இல க்கத்துக்கு அரித்து பெற்றபலத்தை முன்வைத்த நாடியி ன்கீழே விநாடியாகவைப்பது. இது திதிநாடி விநாடியா ம். இதை அர்த்திக்கத் திதியர்த்தமாம். சுத்தபறுவத்தை ஙூ. படிவைத்து ஒருபடியிலே திதியர்த்தங் களையப் பரி ச்காலமாம். ஒருபடி பறுவந்தானே மத்தியகாலமாம். ஒ ருபடியிலே திதியர்த்தங்கூட்ட மோசனகாலமாம். இ வைகளிலே அற்றையில் திவாமானத்தைக் களைந்து நி ன்றதை இரவிற் பரிசகாலம் என்றும் மத்தியகாலம்

என்றும் மோசனகாலம் என்றும் எழுதுவது.

௯௨. சந்திரமண்டலத்துக்குக் கிருசாங்குலம் எவ்வள வோ அவ்வளவு கிரகணமாம்.

௯௩. அரைக்கால், கால், அரை, முக்காற் கிரகணம் வந்து உத்தர கிருசாங்குலமாகில் ஈசானனிற் பரிசம், வாயுவில் மோசனம் என்றும், தக்கண கிருசாங்குலமாகில் அக்கினியிற் பரிசம் நிருதியில் மோசனம் என்றும், முழுக்கிர கணமாகில் கிழக்கே பரிசம் மேற்கே மோசனம் என்றும் எழுதுவது. இந்தப்படி சந்திர கிரகணம் எண்ணிக் கொள்க.

# பஞ்சாங்க வாக்கியம்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ௧ | விண்ணோர்நாதன் | ௭௨௩ | ௨௩ | நீலாவெங்கோன்கோலம் | ௭௬௩ | ௪௫ | கையிற்கூடாநெல் | ௮௪௨ |
| ௨ | பைம்பொனீந்தான் | ௭௨௬ | ௨௪ | ஆளுடையசோழன் | ௭௪௯ | ௪௬ | கொல்லிசொல்லக்கேள் | ௮௩௧ |
| ௩ | வாராய்பூக்கொய்ய | ௭௩௩ | ௨௫ | போதமாம்பொற்பதம் | ௭௩௮ | ௪௭ | என்சொன்னீர்மாதே | ௮௧௭ |
| ௪ | தீட்டூர்வேங்கடம் | ௭௪௨ | ௨௬ | ஐயமீதலறம் | ௭௨௯ | ௪௮ | மையார்மென்சோலை | ௮0௨ |
| ௫ | ஓதைக்கடலோடார் | ௭௫௫ | ௨௭ | சீராரூர்நாயகன் | ௭௨௫ | ௪௯ | குளிர்கொள்வாடை | ௭௮௬ |
| ௬ | மைபோனீண்டமால் | ௭௭0 | ௨௮ | சூதாடேன் | ௭௨௨ | ௫0 | பூமாதின்பொற்கோலம் | ௭௭௧ |
| ௭ | சீவன்வெண்காட்டான் | ௭௮௪ | ௨௯ | கோழிக்கோமான் | ௭௨௪ | ௫௧ | சான்றோரூர்தற்கோலம் | ௭௫௬ |
| ௮ | சிந்திப்போமஞ்சி | ௮00 | ௩0 | கேடிலாக்கோலம் | ௭௨௮ | ௫௨ | தூவாதேவான்கொண்டல் | ௭௪௪ |
| ௯ | மைபோனீராளி | ௮௧௬ | ௩௧ | துண்டுநீர்க்கடல் | ௭௩௭ | ௫௩ | கொள்ளீர்கோலமலர் | ௭௩௪ |
| ௧0 | வேணுமென்றோதீர் | ௮௨௯ | ௩௨ | நின்றானெம்மாயன் | ௭௪௮ | ௫௪ | கூறீர்மாபாரதம் | ௭௨௬ |
| ௧௧ | பேணுநட்டார்சீர் | ௮௪0 | ௩௩ | நீத்தோன்போதவான் | ௭௬௧ | ௫௫ | வைத்திட்டூர்போன் | ௭௨௩ |
| ௧௨ | மேலோர்நூலோதும் | ௮௫0 | ௩௪ | ஒப்பொன்றிலாதான் | ௭௭௬ | ௫௬ | ஆடுங்கூத்தன் | ௭௨௩ |
| ௧௩ | உவாபொய்யாது | ௮௫௭ | ௩௫ | காமனூலோழி | ௭௯௨ | ௫௭ | ஞழூந்தேமா | ௭௨௬ |
| ௧௪ | கீணீர்க்கீழோபூ | ௮௫௯ | ௩௬ | கைக்கிளக்கவி | ௮0௭ | ௫௮ | போதங்கண்டலன் | ௭௩௨ |
| ௧௫ | மாக்கோதைநல்லூர் | ௮௫௮ | ௩௭ | நன்றகிற்கொள்ளீர் | ௮௨௨ | ௫௯ | பற்றிலிபாகன் | ௭௪௧ |
| ௧௬ | புகலிக்கோனேன் | ௮௫௩ | ௩௮ | புரஞ்செற்றநீர் | ௮௩௪ | ௬0 | முன்னோர்நூல்போற்றாய் | ௭௫௪ |
| ௧௭ | பாணுபெற்றதென் | ௮௪௭ | ௩௯ | பொய்யாமலோதும் | ௮௪௫ | ௬௧ | பாடும்வேந்தன்தான் | ௭௬௭ |
| ௧௮ | செய்தனசொல்லேன் | ௮௩௫ | ௪0 | மின்னிமுழங்கும் | ௮௫௩ | ௬௨ | முருகன்கொடி | ௭௮௩ |
| ௧௯ | நல்லோற்குநல்லேன் | ௮௨௪ | ௪௧ | பண்ணுடைப்பாட்டு | ௮௫௮ | ௬௩ | நீலக்குமரி | ௭௯௯ |
| ௨0 | கைதாவேலானே | ௮0௮ | ௪௨ | கோணமீசரூர் | ௮௫௯ | ௬௪ | தெண்ணீர்பேராழி | ௮௧௩ |
| ௨௧ | வாழ்த்தீர்கண்ணனை | ௭௯௩ | ௪௩ | சென்றானேயாரூர் | ௮௫௭ | ௬௫ | குடியாதநீர் | ௮௨௮ |
| ௨௨ | ஓதீர்நீண்டானை | ௭௭௮ | ௪௪ | செய்யிற்றானஞ்செய் | ௮௫0 | ௬௬ | நீதிநூல்பாரீர் | ௮௩௯ |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ௬௭ | ஈயிர்பொன்னது | ௮௫௦ | ௯௦ | இதுபொற்பத் | ௭௯௦ | ௧௧௩ | ஏறுந்துரகம் | ௭௩௨ |
| ௬௮ | வைத்துநீர்வாழும் | ௮௫௫ | ௯௧ | தேவன்சீர்வாழி | ௮௦௫ | ௧௧௪ | ஏகமேபாதம் | ௭௪௦ |
| ௬௯ | செஞ்சடையோனூர் | ௮௫௮ | ௯௨ | பேசுமெங்கோன்சீர் | ௮௨௦ | ௧௧௫ | ஓதுகோலமால் | ௭௫௨ |
| ௭௦ | பூங்கிளியாரூர் | ௮௫௯ | ௯௩ | மாருதம்பாரீர் | ௮௩௪ | ௧௧௬ | பூவினில்மாஞர் | ௭௬௬ |
| ௭௧ | சங்குவெண்கோடேன் | ௮௫௫ | ௯௪ | நூலுற்றுநோக்கு | ௮௪௪ | ௧௧௭ | வெற்றிப்பூங்கொடி | ௭௮௧ |
| ௭௨ | கேடுபடாதென் | ௮௪௭ | ௯௫ | மேலோர்பொற்பாதும் | ௮௫௨ | ௧௧௮ | வீறுடைக்கண்ணி | ௭௯௭ |
| ௭௩ | குருமுன்பொய்யேன் | ௮௩௭ | ௯௬ | பூணைய்நீபொற்பூண் | ௮௫௮ | ௧௧௯ | பூமாதின்கோளி | ௮௧௨ |
| ௭௪ | சோலீரையரே | ௮௨௫ | ௯௭ | புல்லீர்வேதநூல் | ௮௫௯ | ௧௨௦ | வாழச்செல்வநீ | ௮௨௬ |
| ௭௫ | போதவிழ்சோலை | ௮௧௦ | ௯௮ | மாஞேக்கியோபெண் | ௮௫௭ | ௧௨௧ | கனகத்தோடு | ௮௩௯ |
| ௭௬ | குராம்பூவலை | ௭௯௫ | ௯௯ | நிறஞ்செய்யளேன் | ௮௫௧ | ௧௨௨ | சைவன்துடங்கு | ௮௪௮ |
| ௭௭ | நீண்மாலைவாடை | ௭௭௯ | ௧௦௦ | தென்னவன்பொற்றேர் | ௮௪௪ | ௧௨௩ | நீவிலமாது | ௮௫௫ |
| ௭௮ | வேலோமாதரோண்கண் | ௭௬௪ | ௧௦௧ | வேலொடுகண்டேன் | ௮௩௧ | ௧௨௪ | மாலுக்கிட்டபூ | ௮௫௮ |
| ௭௯ | கைவிட்டீர்வான்போகம் | ௭௫௧ | ௧௦௨ | பெற்றீர்பேசாதே | ௮௯௯ | ௧௨௫ | போதமேலாநூல் | ௮௫௮ |
| ௮௦ | பேசுநூல்கோதற | ௭௩௯ | ௧௦௩ | ஓதவாகலை | ௮௦௩ | ௧௨௬ | குன்றுமாயன்பெண் | ௮௫௫ |
| ௮௧ | தேங்கோதைநல்லவள் | ௭௩௦ | ௧௦௪ | தேனறுமாலை | ௭௮௮ | ௧௨௭ | கிளிக்கூடாமென் | ௮௪௮ |
| ௮௨ | விண்ணவன் | ௭௨௫ | ௧௦௫ | நல்லதேபொற்கொண்டல் | ௭௭௩ | ௧௨௮ | காவிபோற்கண்ணே | ௮௩௯ |
| ௮௩ | உலகியல் | ௭௨௨ | ௧௦௬ | ஏத்தீரோகாரோணம் | ௭௫௭ | ௧௨௯ | சேடமீவார்மேல் | ௮௨௬ |
| ௮௪ | வையமுண்டான் | ௭௨௪ | ௧௦௭ | நீறணிபொன்னகர் | ௭௪௬ | ௧௩௦ | ஓதுமெண்கோவை | ௮௧௨ |
| ௮௫ | வெற்பார்மென்கொண்டல் | ௭௨௮ | ௧௦௮ | சேராய்முத்தன்பதம் | ௭௩௬ | ௧௩௧ | வெங்கோபயாவை | ௭௯௭ |
| ௮௬ | விட்டீர்கைதவம் | ௭௩௬ | ௧௦௯ | பூவின்பெண்காதலன் | ௭௨௮ | ௧௩௨ | தேவோன்சீர்பொற்கோலம் | ௭௮௧ |
| ௮௭ | கோவலார்கோமான் | ௭௪௭ | ௧௧௦ | கைக்கிளை | ௭௨௩ | ௧௩௩ | மீளுங்கூடப்போக | ௭௬௬ |
| ௮௮ | வையீர்தீன்பலா | ௭௫௯ | ௧௧௧ | நற்றீபங்காண் | ௭௨௨ | ௧௩௪ | பூவாடையாம்போக | ௭௫௨ |
| ௮௯ | விழியெம்மான்ருள் | ௭௭௪ | ௧௧௨ | கூறீர்விஞேதம் | ௭௨௫ | ௧௩௫ | தாணின்றவன்கண்ணன் | ௭௪௦ |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| கா௬௯ | கேளும்மாதவன் | எ௬௨ | க௫௯ | வல்லோமோபோய்சொல | எ௯0 | க௮௨ | பொன்னவன்பொற்றேர் | அ௫0 |
| க௬எ | விண்ணேருர் | எ௨௫ | க௬0 | குருபாதம்போதம் | எஎச | க௮௩ | மைபோலும்வண்டே | அ௩௯ |
| க௬அ | முன்னேர்வேதம் | எ௨௨ | க௬க | நீதியுண்டாம்போதம் | எ௫௯ | க௮ச | எருதேறுதே | அ௨அ |
| க௬௯ | வேலோபோதோகண் | எ௨௩ | க௬௨ | கற்றேற்கேசொன்னலம் | எசஎ | க௮௫ | கோல்லிமாமலை | அக௩ |
| கச0 | பூதநாயகன் | எ௨அ | க௬௩ | எங்கள்கோமாதவன் | எ௩௬ | க௮௬ | கையீர்புலாவல | எ௯௯ |
| கசக | பொன்னிநீர்நாடன் | எ௩ச | க௬ச | குன்றுமால் | எ௨அ | க௮எ | பாடும்வேலோன்கோலம் | எஅ௩ |
| கச௨ | சூடும்பூக்கோய்தான் | எச௬ | க௬௫ | மையார்நீலம் | எ௨ச | க௮அ | மைநிறமால்கோலம் | எ௬எ |
| கச௩ | மின்னிடைநல்லாய் | எ௫எ | க௬௬ | மதியூர்வான் | எ௨௨ | க௮௯ | வினவீர்கோன்பதம் | எ௫ச |
| கசச | கூறுய்மால்கோயில் | எஎ௩ | க௬எ | தூணிலேதோற்றம் | எ௨௫ | க௯0 | நீதிநூல்கண்டவன் | எசக |
| கச௫ | சீர்துமணி | எஅஅ | க௬அ | கூறீரோங்காரம் | எ௩0 | க௯க | பூணீரேமால்பதம் | எ௩௨ |
| கச௬ | எழுத்தேவாசீ | அ0௩ | க௬௯ | புட்கோடிக்கோமான் | எ௩௯ | க௯௨ | ஆறுங்கோபம் | எ௨௬ |
| கசஎ | ஊழிவாழ்கநீ | அக௯ | கஎ0 | தூணிலுளன்மால் | எ௫க | க௯௩ | முருகார்கார் | எ௨௩ |
| கசஅ | எண்ணுநூல்பாரீர் | அ௩க | கஎக | ஓவாதேபாடாய் | எ௬ச | க௯ச | வேண்டுவீர்சொர்க்கம் | எ௨௩ |
| கச௯ | கழித்தோமது | அசச | கஎ௨ | கைதவந்தவிர் | எஎ௯ | க௯௫ | நீரோவென்றவர் | எ௨௬ |
| க௫0 | பாரீர்சீராய்ந்து | அ௫க | கஎ௩ | வீழிசீர்காழி | எ௯௫ | க௯௬ | வேந்தவணக்காண்க | எ௩ச |
| க௫க | கையுள்ளேபொற்பூ | அ௫எ | கஎச | ஈவோற்கேற்போர்கீழ் | அக0 | க௯எ | பாரீர்கண்களால் | எசச |
| க௫௨ | ஏதமிலாநூல் | அ௫௯ | கஎ௫ | தைத்தீர்த்தமாடீர் | அ௨௫ | க௯அ | வேதநீபாடாய் | எ௫௬ |
| க௫௩ | தூணிலெங்கோனேன் | அ௫அ | கஎ௬ | ஊதீர்முன்கொம்பு | அ௩எ | க௯௯ | மைபோல்மெல்லோதி | எ௭க |
| க௫ச | தேடீர்வல்லார்நேல் | அ௫௨ | கஎஎ | இடுகைநன்று | அசஎ | ௨00 | புனல்கொள்வாவி | எஅ௬ |
| க௫௫ | பாடுமுன்னேன்பேர் | அசச | கஎஅ | ஏதோநீபோமூர் | அ௫௫ | ௨0க | நெறிநின்றேதீர் | அ0௨ |
| க௫௬ | தூநீறையனே | அ௩ச | கஎ௯ | எல்லாந்தேவரூர் | அ௫௯ | ௨0௨ | வீரமென்கற்றீர் | அகஎ |
| க௫எ | பூணையிப்பொன்வண | அ௨0 | கஅ0 | முன்னீர்மால்போலென் | அ௫அ | ௨0௩ | முத்தொக்கக்கோரும் | அ௩க |
| க௫அ | நன்றுபூதமை | அ0௫ | கஅக | போதோசென்றதேன் | ௫௫ | ௨0ச | பெற்றேமுறவு | அச௨ |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| உ0ரு | தென்மலைநாடு | அரு0 | உஉ0 | வேதம்வையம் | எஉச | உநரு | பையச்சென்றேமென் | அருகூ |
| உ0சு | நீணித்திலம்பூண் | அருஎ | உஉக | பொன்னுன்றகோலம் | எஉஉ | உநசு | பூவினன்மாதென் | அருஎ |
| உ0எ | திருச்செங்காடூர் | அருகூ | உஉஉ | குன்ருவிரதம் | எஉரு | உநஎ | பூட்டீர்முன்னேன்றேர் | அரு0 |
| உ0அ | கண்ணன்பாதமென் | அருஅ | உஉந | சிறிதுபாடல் | எஉகூ | உநஅ | கூரீரையரே | அச0 |
| உ0கூ | நீண்டார்பூமாதென் | அருந | உஉச | ஆடும்பெண்பொல்லாள் | எநஅ | உநகூ | துடியிலோசை | அஉகூ |
| உக0 | கையார்கோலவேல் | அசரு | உஉரு | கற்ருர்சொற்காணுய் | எசகூ | உச0 | அரனென்றறை | அகசு |
| உகக | இல்லார்க்கீவார்மேல் | அநச | உஉசு | நீள்கொடிக்கோயில் | எசுந | உசக | அளியோபோதோகண் | அ00 |
| உகஉ | முன்னேன்பேர்கோதை | அஉஉ | உஉஎ | வான்றேய்தூய்மதில் | எஎஅ | உசஉ | துளிரிளங்கொங்கம் | எஅச |
| உகந | சார்மீன்கற்ருரை | அ0எ | உஉஅ | புலமைவாழி | எகூந | உசந | குராம்பூவார்கொய்ய | எஎ0 |
| உகச | தீட்டீர்நீண்டோன்கோலம் | எகூஉ | உஉகூ | இரீர்மாதரீர் | அ0அ | உசச | பொன்னேடைப்போதகம் | எருரு |
| உகரு | தொழீர்தெய்வக்கோலம் | எஎசு | உந0 | வெண்பானூல்பாரீர் | அஉச | உசரு | நாராயணசரண் | எசஉ |
| உகசு | கண்டாயோபொற்பதம் | எசுக | உநக | தாராய்பொற்பந்து | அநரு | உசசு | புலியின்றேல் | எநந |
| உகஎ | வைத்தீட்டார்நல்லவர் | எசஅ | உநஉ | பைந்தார்நீண்மாது | அசஎ | உசஎ | கற்றீர்முன்னம் | எஉசு |
| உகஅ | நூலோதுமாதவர் | எநஎ | உநந | பாரீர்மேலோர்நூல் | அருந | உசஅ | ஈயீர்நேற்ருள் | எஉந |
| உககூ | நீலப்பெண் | எஉஅ | உநச | பொற்றேடியாரூர் | அரு அ | | | |

